Regd. No M. 5934 Phone: 2241

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)

மலர் 15 இதழ் 67 ] சென்னை 23-10-58 விளம்பி௵ ஐப்பசி௴ 7௳ வியாழக்கிழமை [ 4 பக்கங்கள் 7 காசுகள்

### 500 ஆப்ரிக்க மாதர் கைது!

ஜோஹன்ஸ்பர்க், அக். 21—

தங்களுடைய அடையாளச் சீட்டுகளைக் கட்டாயமாகத் தாங்கிச் செல்லவேண்டும் என்ற தாக்கிதை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்த 500 ஆப்ரிக்க மாதர்கள் இன்று தென் ஆப்ரிக்கப் போலீசாரால் கைது செய்யப்பட்டனர். அவர்களுக்கு ஆதரவு தெரிவிக்கும் முறையில் மேலும் 460 ஆப்ரிக்க மாதர்கள் தாங்களாகவே போலீசாரிடம் சரணடைந்தனர்.

### புற்றுநோய் கண்டுபிடிப்பில் சோவியத் சாதனை

லண்டன், அக். 21—

வெகு சீக்கிரத்தில் புற்றுநோயைக் கண்டுபிடிக்கும் முறையில் பேராசிரியர் மாக்சிம் மீய்செல் என்ற சோவியத் விஞ்ஞானி வெற்றியடைந்துள்ளார். 'அல்ட்ரா வயலட்' கிரணங்களை உபயோகப்படுத்துவதின் மூலமும், வர்ணப் பொருள்களை உபயோகப் படுத்துவதின் மூலமும் இவர் இதை சாதித்துள்ளார். ரண சிகிச்சையின்போதுகூட இம்முறையைக் கையாண்டால் புற்றுநோய் பீடித்துள்ள தசைகள் நிறமாற்றமடைந்து, ஆரோக்யமான தசைகளிலிருந்து தங்களைப் பிரித்துக் காட்டுகின்றன என்று மாஸ்கோ ரேடியோ அறிவித்தது.

# குற்றவாளிகள் தோட்ட முதலாளிகளே!

## தொழிலாளர் வேலைநிறுத்தம் முற்றிலும் நியாயமானது

### கேரள தொழிலாளர் அமைச்சர் டி. வி. தாமஸ் அறிவிப்பு

திருவனந்தபுரம், அக். 21—

வேலைநிறுத்தம் செய்துவரும் கண்ணன்தேவன் கம்பெனி தோட்டத் தொழிலாளர்கள் மீது நடந்த துப்பாக்கிப்பிரயோகம் சம்பந்தமாக கேரள தொழில் மந்திரி டி. வி. தாமஸ் இன்று பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில், "போலீஸ் துப்பாக்கிப்பிரயோகம் பற்றி விசாரணை நடத்தப்பட வேண்டுமென்று நான் கருதுகிறேன்" என்று தெரிவித்தார்.

மேலும், 'துப்பாக்கிப்பிரயோகத்தில் மாண்டவர்களுக்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்றும் கருதுகிறேன்' என்றார்.

இது பற்றி நீதி விசாரணை நடத்தப்படுமா என்று கேட்கப்பட்டபோது, இதுபற்றி இன்னும் முடிவு செய்யப்படவில்லை என்று பதிலளித்தார்.

#### துரதிர்ஷ்டமானது

மேலும் அவர் விளக்குகையில், "போலீஸ் துப்பாக்கிப்பிரயோகம் செய்தது துரதிர்ஷ்டமானது" என்று கூறினார்.

மூணாறில் உள்ள போலீஸ் படையினர் நெருக்கடியான நிலைமையில் வேலை செய்து வருவதாகவும் கூறினார்.

"நான் ஞாயிற்றுக்கிழமை மூணாறை விட்டுப் புறப்படும் வரையிலும் போலீஸின் நடத்தை நன்றாகத்தானிருந்தது. ஆனால் நேற்று என்ன நிலைமை ஏற்பட்டது என்று எனக்குத் தெரியாது" என்றார்.

#### சரியான பாதுகாப்பு

"தோட்ட நிர்வாகத்தின் உடமைக்கும் உயிருக்கும் பரிபூரண பாதுகாப்பு அளிக்கப்பட்டது. இதுபோன்ற முழுக்க முழுக்க சரியான பந்தோபஸ்தை நான் இதுவரை கண்டதே இல்லை. ஐரோப்பிய ஜெனரல் மானேஜர் 3 நாட்களுக்கு முன் 17-10-58ல் எனக்கு எழுதிய கடிதத்தில், 'சட்டம் அமைதி நிலைமை பெருமளவு அபிவிருத்தியடைந்திருக்கிறது' என்று குறிப்பிட்டுள்ளார்.

தொழில் மந்திரி டி. வி. தாமஸ் மேலும் பேசுகையில், "ஹைரேஞ்சு தோட்டத் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் முழுக்க முழுக்க நியாயமானது என்று கேரள சர்க்கார் அறிந்துள்ளது. அந்த வேலைநிறுத்தத்துக்கு பெரும்பாலான தொழிலாளர்களின் ஆதரவு இருக்கிறது" என்றார்.

#### குற்றவாளி தோட்ட முதலாளியே

மூணாறிலிருந்து, திருவனந்தபுரத்துக்கு அக். 20-ம் தேதி இரவு டி. வி. தாமஸ் வந்து சேர்ந்தார். தான் செய்த சமரச முயற்சிகளைப் பற்றி இன்று பகல் பத்திரிகை நிருபர்களிடம் விளக்கிக் கூறியபின், குறிப்பிட்டதாவது:

"வேலை நிறுத்தத்தை வாபஸ் வாங்கிக் கொள்ளுமாறு நான் தொழிலாளிகளிடம் வேண்டுகோள் விடமாட்டேன். அதற்கு மாறாக, தோட்ட நிர்வாகத்திற்கு எதிராக, சாத்தியப்பட்ட சகல நடவடிக்கைகளையும் சர்க்கார் எடுக்கும். வேலைநிறுத்த நிலைமையைச் சமாளிக்க என்னென்ன கொள்கைகளைக் கடைபிடிக்க வேண்டுமென்று சகல தரப்பிலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால் ஒத்துக் கொள்ளப்பட்ட அந்த கொள்கைகளனைத்துக்கும் விரோதமாகவே ஆரம்ப முதல் தோட்ட நிர்வாகம் நடந்து வந்திருக்கிறது" என்றார்.

"வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளர்கள், கூட்டு பேரம்பற்றி நைனிடால் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட ஒழுங்கு விதிகளை மீறவேயில்லை. இங்குமங்கும் சில சிறு சம்பவங்கள் ஏற்பட்டிருந்தாலும்கூட, பொதுவாக நோக்குமிடத்து, வேலைநிறுத்த தொழிலாளர்கள் அமைதியாகவும் சமாதானமாகவும் இருந்திருக்கிறார்கள்.

"தோட்ட நிர்வாகமும் ஐ. என். டி. யு. சி. சங்கமும் கூடிப் பேசி, பல பிரச்னைகளை அட்ஜுடிகேஷனுக்கு விடவேண்டுமென்று சர்க்காருக்கு மனுச் செய்தன. சர்க்கார் அதை ஒத்துக்கொள்ளவில்லை. நிராகரித்துவிட்டது காரணம், அது சட்ட விரோதம்.

"தொழில் தகராறுசட்டம் பத்தாவது விதி 2-வது ஷரத்துப்படி முதலாளியுடன் உடன்படிக்கை செய்துகொள்ளும் சங்கமானது, மெஜாரிட்டி தொழிலாளர்களின் ஆதரவைப் பெற்றிருக்க வேண்டும். ஐ. என். டி. யு. சி.க்கு அந்த ஆதரவு இல்லை. எனவே, சர்க்கார் அதன் மனுவை ஏற்றுக்கொள்ளுவதற்கு மில்லை. ஐ. என். டி. யு. சி. சொன்னபடி வேலைக்கு ஆஜராகும் தொழிலாளர்களின் எண்ணிக்கையைப் பார்த்தாலே, ஐ. என். டி. யு. சி.க்கு மெஜாரிட்டி இல்லை என்பது தெளிவாகும்.

#### 30,000-ல் 8600 பேரே

"மானேஜ்மெண்டார் வெளியிடும் துண்டுப்பிரசுரங்களில், 25 முதல் 44 சதவிகிதம்வரை தொழிலாளர்கள் வேலை செய்து வருவதாகத் தெரிவிக்கப்பட்டதிலிருந்தும், அதாவது அவர்கள் கூறுகிறபடி 8600 தொழிலாளர்கள் வேலைக்கு வந்திருப்பதாகத் தெரிவிப்பதிலிருந்து மைனாரிட்டிதான் வேலைசெய்து வருகிறார்கள் என்பது தெட்டத்தெளிவாகும். ஏனென்றால் மொத்தத் தொழிலாளர் எண்ணிக்கை 30 ஆயிரமாகும்.

"பிரதான தகராறு 1957-ம் ஆண்டுக்கு போனஸ் விஷயம். நான் தோட்ட நிர்வாகத்தின் முன்னும் தொழிலாளர் முன்னும் வைத்த ஆலோசனை இதுதான். உடனடியாக 20 ரூபாய் ஒவ்வொரு தொழிலாளிக்கும் மொத்தப் பணமாகக் கொடுக்கவேண்டுமென்றும் அதை தொழிலாளர்கள் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், பிறகு, கூடிய சீக்கிரம் முக்கூட்டு மகாநாடு கூட்டப்படுமென்றும், அந்த மகாநாட்டில் போனஸ் பிரச்னைபற்றி பொது உடன்பாடு வேலைநிறுத்த கால சம்பளம் ஆகியவை பற்றி முடிவு ஏற்படும்போது ஈடுசெய்யப்படவேண்டுமென்றும் சொன்னேன். அதை தொழிற்சங்கம் ஒப்புக்கொண்டது. அதில் எந்தவிதமான அதிக போனஸ் தரவேண்டியதில்லை யென்று முடிவு செய்யப்பட்டால், தொழிலாளர் சம்பளத்திலிருந்து இந்த 20 ரூபாயைப் பிடித்துக்கொள்ளட்டும் என்றேன். இதனால் நிர்வாகத்துக்கும், செங்கொடிச் சங்கத்துக்கும், ஐ என் டி யு.சி. சங்கத்துக்கும் ஒரு கஷ்டமும் இருக்க முடியாது. இதுமாதிரியான சந்தர்ப்பங்களில் சர்க்கார் சொல்லுவதை இருதரப்பினரும் ஒப்புக்கொள்வது வழக்கம். ஆனால் தோட்ட நிர்வாகம் விளக்கம் கூறாமல் 3 நாட்களுக்குபிறகு நிராகரித்து விட்டது. இது விஷயத்தைப்பற்றி, அதாவது, எனது ஆலோசனையை எவ்வித விளக்கமும் தெரிவிக்காமல் மானேஜ்மெண்டார் நிராகரித்து விட்டதையும், சமரச உடன்பாடு செய்துகொள்ளுவதில் மானேஜ்மெண்டார் சர்க்காருடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டதையும் முதலமைச்சரிடம் அறிக்கை சமர்ப்பித்து விட்டேன் என்றாலும் சமரசம் சாத்யம் என்பதில் நான் நம்பிக்கை கொண்டுள்ளேன். தோட்ட நிர்வாகிகளை நாளை சந்திப்பேன் என்றார்.

(பி டி ஐ.)



### தோட்டங்களை மூடுவதாக முதலாளிகள் மிரட்டல்

கோட்டயம், அக். 21—

அக். 25-ல் பொதுவேலை நிறுத் முடிவு செயல்படுத்தப்பட்டால் ஹைரேஞ்சிலுள்ள பெரும்பான்மையான எஸ்டேட்டுகளை முழுதுமாக மூடிவிடுவதென்று தீர்மானிக்கப்பட்டிருப்பதாகச் செய்தியொன்று கூறுகிறது. ஆனாலும் இந்த நிலைமை ஏதாவது ஒரு ஒப்பந்தத்தின் மூலமாகத் தவிர்க்கப்படும் என்றும் தோட்ட முதலாளிகள் சங்கத்துடன் நெருங்கிய வட்டாரங்கள் கூறுகின்றன.

தோட்ட முதலாளிகள் சங்கத்தின் துணைத் தலைவர் கெர்ஸ்ய்யூ, இது பற்றிய கருத்தினைத் தெரிவிக்கையில், தோட்டங்களனைத்தையும் மூடுவது பற்றிய முடிவொன்றும் எடுக்கப்படவில்லை என்றார். ராஜ்ய தொழிலாளர் துறை அமைச்சர் டி.வி. தாமஸை இன்று, இவர் சந்தித்துப் பேசியதாகத் தெரிகிறது.

தோட்டத் தொழிலாளருக்கும் தோட்ட முதலாளிகளுக்கும் இத் தகராறு பற்றியதொரு உடன்பாட்டுக்கு வருவதுபற்றி நாளை மீண்டும் இவர் ராஜ்யத் தொழில் அமைச்சரைச் சந்தித்துப் பேசுவாராம்.

### சியாங்கின் திண்டாட்டம்!




## அணு ஆயுத சோதனை: நிபந்தனையின்றி தடை செய்யவேண்டும்!

### சோவியத் பிரதிநிதி வற்புறுத்தல்

### மனித சமுதாயத்திற்கு ஏற்படும் ஆபத்து பற்றி இந்தியா எச்சரிக்கை

ஐக்யநாடுகள், அக். 21—

அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவது சம்பந்தமாக எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் ஒரு தீர்மானத்தைத் தயாரிப்பதில் ஈடுபட்டுள்ள இந்தியப் பாதுகாப்பு மந்திரி திரு. வி. கே கிருஷ்ணமேனன், இன்று மேலைய வல்லரசுகளின் பிரதிநிதிகளுடனும் சோவியத் பிரதிநிதிகளுடனும் மீண்டும் பேச்சுவார்த்தைகள் நடத்தினர்.

திரு. கிருஷ்ணமேனன் இந்தியாவில் ஹைதராபாத்தில் நடைபெறும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் கலந்துகொள்வதற்காக இன்றிரவு நியூயார்க்கை விட்டுப் புறப்பட்டார். அவர் புறப்பட்ட பின், ஐ. நா.விலுள்ள நிரந்தர இந்தியப் பிரதிநிதி ஆர்தர்லால் தொடர்ந்து சம்பாஷணைகள் நடத்துவார்.

திரு. மேனன் அடுத்த மாத மத்தியில் மீண்டும் நியூயார்க் திரும்புவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சோதனைகளைத் தடை செய்ய வேண்டுமென்பதை, பிரெஞ்சு தூதுக்குழு தவிர இதர எல்லா நாடுகளின் தூது குழுக்களும் கோட்பாடு ரீதியில் ஒத்துக் கொண்டுள்ளன.

#### மூன்று தீர்மானங்கள்

ஆனால் இந்த விஷயம் சம்பந்தமாக சோவியத் தீர்மானம் ஒன்றும், மேலைய வல்லரசுகளின் தீர்மானம் ஒன்றும், இந்தியாவின் தீர்மானம் ஒன்றும்—ஆக மூன்று தீர்மானங்கள் ஐ. நா. அரசியல் கமிட்டியின் முன் உள்ளன. அணு ஆயுத சோதனைத் தடையை எப்படி அமுலுக்குக் கொண்டுவருவது என்பதில் இத் தீர்மானங்களுக்கிடையில் வித்யாசங்கள் இருக்கின்றன.

#### சோவியத் பிரதிநிதி

சோவியத் பிரதிநிதி ஜோரின், அரசியல் கமிட்டியில் பேசுகையில், எவ்வித நிபந்தனையுமின்றி சோதனைகளைத் தடை செய்ய வேண்டுமென்று சோவியத் யூனியன் விரும்புகிறது. ஆனால் மேலைய வல்லரசுகள் சோதனைத் தடைக்கு 3 நிபந்தனைகளை விதிக்கின்றன என்று கூறினார்.

#### இந்தியாவின் கருத்து

அணு ஆயுத சோதனைகளைத் தடை செய்வது மட்டுமின்றி, அணு ஆயுத சேமிப்புகளையும் அழித்துவிட வேண்டும் என்று இந்தியா வலியுறுத்தி வருகிறது. ஏனெனில் இந்த ஆயுதங்கள் மனித சமூகத்திற்கும், இனி பிறக்கப் போகும் சந்ததிகளுக்கும் பேராபத்தாகும்.

ஆயுதப் போட்டி உலக நாசத்தில் கொண்டுபோய் விடும் என்றும் இந்தியா கருதுகிறது.

யுத்தத்தை மூட்டுவதற்கு எதிராக ஒரு தடைக்கல்லாக அணு ஆயுதங்கள் இருக்கின்றன என்ற தத்துவத்தை இந்தியா நிராகரித்துள்ளது.

81 நாடுகளின் பிரதிநிதிகள் உள்ள ஐ. நா. பொதுச் சபையே ஆயுதக் குறைப்புக் கமிஷனாகச் செயல்படவேண்டும், என்றும் இந்தியா கூறியுள்ளது.

#### எச்சரிக்கை

மேலும் இந்த அழிவு ஆயுதங்களை இதர சிறிய நாடுகளுக்கு வல்லரசுகள் விநியோகம் செய்வதின் ஆபத்திற்கெதிராகவும் இந்தியா எச்சரித்துள்ளது.

இந்த அம்சங்களை அயர்லந்து, ஸ்வீடன் போன்ற நாடுகளும் எடுத்துக் காட்டியுள்ளன.

எல்லோரும் ஒத்துக்கொள்ளும் படியாக ஒரு தீர்மானத்தைத் தயாரிப்பதில் தோல்வி ஏற்பட்டால், இந்தியா தன்னுடைய தீர்மானத்தையே ஓட்டுக்கு விட வேண்டுமென்று வற்புறுத்தும் என்று தெரிகிறது.

## டல்லஸ்-சியாங் ஆலோசனை

### கம்யூனிஸ்ட் பீரங்கிகள் குமாய் தீவை நொறுக்குகின்றன

தைபே (பார்மோசா), அக். 21—

சீனக் கம்யூனிஸ்டுகளின் பீரங்கித் தாக்குதல், குமாய் தீவுமீது இரண்டாவது நாளும் ஏற்பட்டுக் கொண்டிருப்பதைப்பற்றி அமெரிக்க ராஜாங்க மந்திரி டல்லஸ் இன்று சியாங்கே ஷேக்குடன் 2½ மணி நேரம் கூடிப் பேசுகிறார். டல்லஸ் பார்மோசாவுக்கு அலாஸ்காவிலிருந்து பறந்து வந்தபோது, வழியில் குமாயை சீனக் கம்யூனிஸ்டுகளின் பீரங்கிகள் தகர்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். 16 மணி நேரத்தில் 3,313 குண்டுகள் பொழியப்பட்டதாகவும், குமாயில் இறங்க சீனப் படைகள் படகு ஒத்திகைகள் நடத்திக் கொண்டிருப்பதாகவும் பார்மோசா தரப்பில் கூறுகிறார்கள்.

டல்லஸ் வந்தது, பரஸ்பர பாதுகாப்பு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளுவதற்காக அல்லவென்றும், பரஸ்பரம் நம்பிக்கையைப் பலப்படுத்திக் கொள்ளுவதற்குத்தான் என்றும் டல்லஸ் கூறினார்.

பார்மோசா கடலின் ஆகாயத்திலே, 3 சீன ஜெட் விமானங்கள், 8 பார்மோசா வேட்டை விமானங்களைத் தாக்கி விரட்டின.

இங்கு டல்லஸ் வந்தது, 'சியாங்கேஷேக்கின் கையை முறுக்கி, சூடுபோட்டு இதைச் செய், அதைச் செய் என்று கட்டளையிட அல்ல என்றும், வியாழக்கிழமையன்று டல்லஸ் வாஷிங்டனுக்குத் திரும்புவாரென்றும் ஒரு அமெரிக்க முக்கியஸ்தர் கூறினார். அவர் சியாங்குடன் 3 நாள் விவாதிப்பார்.

கம்யூனிஸ்ட் கட்சியின் 'பீப்பிள்ஸ் டெய்லி' பத்திரிகை, 'சமரசமாக இப்பிரச்சினைக்கு முடிவு காண இன்னமும் தயார் என்று எழுதியுள்ளது. குமாயில் பீரங்கிப்பிரயோகம் செய்வது, கோமிங்டாங்கின் மூளைக்கொதிப்பை நிதானப்படுத்தவே' என்றும் எழுதியுள்ளது.

## காங்கிரஸ் போக்கு ஜனநாயகத்திற்கு ஆபத்து

### கோவிந்தன் நாயர் கண்டனம்

பம்பாய், அக். 20—

கேரள சர்க்கார் விஷயத்தில் காங்கிரஸ் கட்சியினர் ஜனநாயக விதி முறைகளையும், அரசியல் கண்ணியத்தையும் காற்றுவாக்கில்விட்டு நடப்பதையும் அதனால் அரசியல் துறையில் இந்தியாவின் நிலை வலுவடைந்திருப்பது மாறி பலவீனப்படுவதாய் முடியுமென்பதையும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் கேரளக் கமிட்டியின் காரியதரிசி எம். என். கோவிந்தன் நாயர் நிருபர்களிடம் எடுத்துரைத்தார்.

கோவிந்தன் நாயர் கூறியதாவது: "கடந்த பத்து ஆண்டுகளில் இந்தியாவின் மிக மிக விசேஷம் பொருந்திய சாதனை எது என்றால், நம் நாடு அரசியல் துறையில் நிலைபெற்று வலிமையுற்று விளங்குவதே. ஆனால் காங்கிரஸ் கட்சியினர் ஜனநாயக விதிமுறைகளையும் அரசியல் கண்ணியத்தையும் காற்று வாக்கில் விட்டு, கேரள சர்க்காரை எதிர்க்கின்றனர் இதனால் இன்றுள்ள அரசியல் ஸ்திரத்தன்மை பலவீனப்படுவதாய் முடியும்.

#### ஜனநாயகத்திற்கே ஆபத்து

கேரளத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் மந்திரி சபையை எதிர்த்து காங்கிரஸானது அடாத முறையில் நடந்து வருகிறது. இவ்வித போக்கால் கேரள சர்க்கார் இயங்குவதே சிரமமாகப் போகக் கூடிய நிலைமை ஏற்படும்.

நிலைமை இவ்விதமே நீடிக்குமானால், காங்கிரஸ் கட்சியின் நியாயமற்றப் போக்கு மாறாவிட்டால், அரசியல் துறையில் இந்தியா உறுதியாக நிலைபெற்றிருக்கும் வாய்ப்பு நீடிப்பதற்கு இடமில்லாமற்போய், ஜனநாயகத்திற்கே ஆபத்தாக முடியும்.

#### காங்கிரஸ் காரியக் கமிட்டியின் விபரீதம்

காங்கிரசின் சகிப்புத்தன்மையற்றப் போக்குக்கு எடுத்துக்காட்டாக எம். என். கோவிந்தன் நாயர் காங்கிரஸ் காரியகமிட்டியின் தீர்மானத்தைச் சுட்டிக் காட்டினார். கம்யூனிஸ்ட்களின் தலைமையில் கேரள மந்திரிசபை ஏற்பட்டதுமுதல் காங்கிரஸும் இதர எதிர்க்கட்சிகளும் கடைபிடித்துவரும் பலாத்கார, ஜனநாயக விரோதமான, முட்டுக்கட்டை ரீதியான முறைகளையும் சூழ்ச்சிகளையும் காங்கிரஸ் காரிய கமிட்டி கண்டுகொள்ளாமலிருப்பதையும் கோவிந்தன் நாயர் சுட்டிக் காட்டினார்.

#### உணவு நிலைமை: மத்திய சர்க்கார் அநீதி

கேரள உணவு நிலைமைபற்றி அவர் சொன்னதாவது: "கேரள ராஜ்யம் உணவு உற்பத்தியில் 50 சதவீதம் பற்றாக்குறை உடையது. நாட்டிற்கு டாலர்களை சம்பாதித்துக் கொடுக்கும் மிளகு ரப்பர், தேயிலை முதலியன பயிராவதால் உணவு தானியம் பற்றாக்குறையாக இருக்கிறது. எனவே மத்திய சர்க்கார் இந்த ராஜ்யத்திற்கு உணவுப் பொருள்களை சப்ளை செய்யக் கடமைப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் தனது பொறுப்பை தட்டிக் கழிப்பதுடன், இவ் விஷயத்தில் கேரள சர்க்காருக்கு இடைஞ்சல்களையும் விளைவித்து வருகிறது

"இவ்விதம் மத்திய சர்க்காரும் காங்கிரஸ் கட்சியும் ஓரவஞ்சனையாகவும் ஜனநாயக விரோதமாகவும் நடந்துக் கொள்வதை நிறுத்தும்படிச் செய்ய இந்நாட்டிலுள்ள ஜனநாயக பற்றுள்ள மக்கள் முயல வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்."

#### அரசியல் கொலைகள் அல்ல

அரசியல் கொலைகள் நடந்ததாகக் கூறப்படும் புகாருக்கு கோவிந்தன் நாயர் பதிலளித்தார். இதர ராஜ்யங்களில் நடப்பதுபோலவே கேரளத்திலும் கொலைகள் நடந்ததுண்டு. ஆனால் பெரும்பாலான சம்பவங்கள் அரசியல் கொலைகளே அல்ல. எதிர்க்கட்சியினர் ஆத்திரமூட்டியதால் நிகழ்ந்தவையே மற்ற கொலைகள்.

அரசியல் கொலைகள் நடந்ததாகக் கூறப்படும் புகார்களை விசாரிக்க கமிஷன் ஒன்றை நியமிக்க கேரள சர்க்கார் உத்தேசித்திருக்கவில்லை.

#### கம்யூனிஸ்ட் வெற்றி நிச்சயம்

இனி நடக்கும் தேர்தல்களில் கம்யூனிஸ்ட் கட்சியே வெற்றி பெறுமென்றும் இதில் சந்தேகமே இல்லையென்றும் கோவிந்தன் நாயர் கூறினார்.

### கடைசிச் செய்தி

கோவை, அக். 22—

தேவிகுளம் கண்ணன்தேவன் தேயிலைத் தோட்டங்களில் நடைபெற்றுவரும் தோட்டத் தொழிலாளர் வேலை நிறுத்தம் மத்திய திருவிதாங்கூர் பகுதியிலுள்ள தோட்டங்களுக்கும் பரவியுள்ளது என்று தெரிகிறது.





*வையத்துள் வாழ்வு ஆங்கு வாழ்பவன் வான் உறையும்*
*தெய்வத்துள் வைக்கப்படும்—குறள். 53.*

*வாழவேண்டிய இயல்பை அறிந்து உலகில் எவன் வாழ்கிறனே அவன், வானுலகில் உள்ள தெய்வத்துக்கு நிகரான பெருமதிப்புப் பெறுவான்.*


# ஜனசக்தி

சென்னை 23 10-1958


## வழக்கை வாபஸ் வாங்குக!

சென்னைத் துறைமுகத் தொழிலாளர் வேலை நிறுத்தம் நடந்து முடிந்து ஏறக்குறைய இரண்டரை மாதங்கள் தாண்டி விட்டன.

அந்த வேலை நிறுத்தத்தின் போது நடந்த சம்பவங்களை இன்று நினைத்தாலும் நெஞ்சு வெடிக்கும் போலிருக்கிறது. இந்திய ஜனநாயகத்திற்குக் கொடிய களங்கம் ஏற்படத் தக்க விதத்தில் தொழிலாளர்கள் நரவேட்டையாடப்பட்டார்கள். ஈவிரக்கமின்றி நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தால் 6 பேர்கள் உயிர் வாங்கப்பட்டார்கள்; பலர் படுகாயப்படுத்தப்பட்டனர். பயங்கர அடக்குமுறை சொல்லும் தரத்ததல்ல.

போதாதென்று, ஏ. எஸ். கே. அய்யங்கார், அந்தோணிப் பிள்ளை போன்ற தொழிலாளர் தலைவர்கள் உட்பட 68 பேர் மீது வழக்குத் தொடுத்தனர். குதிரை கீழே தள்ளியதோடன்றி குழியையும் பறித்த கதையாக, கொலைகாரத் தர்பார் நடத்திய சர்க்கார் அமைதி காக்க முயன்ற தலைவர்கள் மீதும் வழக்குத் தொடுத்தார்கள்.

இது மட்டுமல்ல. சென்னை ராஜ்ய சர்க்கார் வேலைநிறுத்த காலத்தில், கருங்காலி வேலை வேறு பார்த்தார்கள்.

சென்னை ராஜ்ய சர்க்கார் மட்டும், "இந்து" வேலை நிறுத்தத்தின் போது கடைப்பிடித்த முறையை துறைமுக வேலைநிறுத்தத்திலும் கடைப்பிடித்திருந்தால், மருந்துக்குகூட ஒரு அசம்பாவிதம் நடந்திருக்காது.

'இந்து' விஷயத்தில் காங்கிரஸ் தலைமை என்றும், 'துறைமுக விஷயத்தில், மாற்றுக் கட்சித் தலைமை என்றும் பாரபட்சம் காட்டியே சென்னை ராஜ்ய சர்க்கார் நிலைமைகளைச் சமாளிக்க வெவ்வேறு முறைகளைக் கடைப்பிடித்ததென்று ஊரெல்லாம் பேசிக்கொள்ளப்படுகிறது. நிற்க,

சௌரிக் குழுவின் ஆலோசனைகள், துறைமுகத் தொழிலாளர் கோரிக்கைகளை நியாயப்படுத்துகின்றன. பிரதமர் நேருவும் தொழிலாளர் கோரிக்கைகள் நியாயமானவை என்று ஒப்புக் கொண்டார். தொழிற்சங்கத் தலைவர்களுக்குப் பேட்டி அளித்த பொழுது, இந்தக் கோரிக்கைகளை நியாயமென ஒப்புக்கொண்டதோடு, வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டயார் மீதும் பழி வாங்கும் நோக்கமில்லை என்றும் தெளிவாகச் சொன்னார்.

சமரஸம் ஏற்பட்டது. வேலை நிறுத்தம் வாபஸ் வாங்கப்பட்டது.

இந்தசமரஸத்தின் நோக்கத்தைக் காத்து, அமைதிச் சூழ்நிலையை நிலை நாட்ட வேண்டியது நாட்டு நலனுக்கு மிகத் தேவை என்பது சொல்லத் தேவையில்லை. ஒவ்வொரு ராஜ்ய சர்க்காருக்கும் இது தவிர்க்க முடியாத கடமை.

காங்கிரஸ் தலைவரான பனம்பள்ளி கோவிந்த மேனன், சீதாராம் மில்லில் நடத்திய போராட்டம் வாபஸ் ஆனதும் கேரள சர்க்கார் செய்தது என்ன? வழக்குகளை வாபஸ் செய்தது. மாணவர் வேலைநிறுத்தம் நின்றதும் கேரள சர்க்கார் செய்தது என்ன? துறைமுகத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைப் போலல்லாமல், நாட்டுக்கு எவ்வளவோ நாசத்தை வேலைநிறுத்தக்காரர்கள் செய்திருந்தும், வழக்குகளை எல்லாம் உடன் வாபஸ் செய்தது. உண்மையாகவே மக்களுக்கும் சர்க்காருக்கும் இடையில் கசமுசா, எதுவும் இருக்கக்கூடாது, சௌஜன்யமும் நியாயமான உண்மையான அமைதிச் சூழ்நிலை உருவாக வேண்டிய பெரும் பொறுப்பு சர்க்காரைச் சார்ந்தது என்று உணர்ந்த காரணத்தால், கேரள சர்க்கார் கைதானவர்களை விடுதலை செய்யவும், வழக்குகளை வாபஸ் வாங்கவும் கொஞ்சம் கூடத் தயங்கவில்லை.

சென்னை ராஜ்ய சர்க்கார் துறைமுகத் தொழிலாளர் வேலைநிறுத்தத்தை ஒட்டி போடப்பட்ட வழக்குகளை இன்னும் வாபஸ் பெருதது கொஞ்சமும் சரியல்ல. வழக்குகளை நடத்தித்தான் தீர்வது என்று சர்க்கார் நினைத்தாலும் சரி, அல்லது, வழக்குகளை வாபஸ் வாங்குவதில் சர்க்கார் காலங்கடத்த விரும்பினாலும் சரி, அது சுமுக உறவைக் கட்டிக் காக்கவோ, சகஜ நிலையை நிலை நாட்டவோ ஒரு எள் மூக்கத்தனை அளவு கூடப் பயன்படாது. மாருக, சுமுக உறவு கெடவும், தேச நலன் பாதிக்கப்படவுமே உறுதுணை புரியும்.

எனவே, "இந்து"வில் நடந்து கொண்டது போல், துறைமுகத் தொழிலாளர் விஷயத்திலும் சென்னை ராஜ்ய சர்க்கார் நடந்து கொண்டு, வழக்குகளை உடனே வாபஸ் செய்வது தான் அழகு. ராஜ்ய சர்க்கார் இந்தக் காரியத்தில், தயக்கமோ தாமதமோ காட்டுமானுல், மத்திய சர்க்கார் உடனே தலையிட்டு, யாரும் பழிவாங்கப்படமாட்டார்கள் என்று கொடுத்த தங்கள் வாக்குறுதியைக் காப்பாற்ற முன்வர வேண்டும்.

எந்த வகையில் பார்த்தாலும் மேற்படி வழக்குகளை இன்னும் வாபஸ் வாங்காதிருக்கக் கொஞ்சம் கூட நியாயமில்லை.

## நிதி மந்திரியின் வாக்குறுதி நிறைவேற்றப்படுமா?

"மத்திய அரசாங்க, மாநில அரசாங்க ஊழியர்களிடையே உள்ள ஏற்றத் தாழ்வுகள், மத்திய சம்பளக் கமிஷன் கூறும் ஆலோசனைகளின் பிரகாரம் நீக்கப்படும்" என்றும், "சம்பளக் கமிஷன் அறிக்கை கிடைத்ததும் சென்னை அரசாங்க ஊழியர்களின் குறைபாடுகளை நீக்குதற்கான நடைமுறைகள் பற்றிய பரிசீலனை செய்யப்படும்" என்று சென்னை நிதி அமைச்சர் சி. சுப்ரமணியம் சமீபத்தில் சென்னையில் பேசிய கூட்டமொன்றில் குறிப்பிட்டுள்ளார்.

அண்மையில் நடைபெற்ற சட்டசபை விவாதத்தின்போது தோழர் கல்யாணசுந்தரம், சென்னை அரசாங்க ஊழியர்களின் சம்பளத்தை உயர்த்தவும், நிர்வாகத் திறனை அதிகரிக்கவும் வழிகாண ஒரு சம்பள ரிவிஷன் கமிட்டி ஏற்படுத்த வேண்டுமென்று ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். சம்பளக் கமிஷன் அறிக்கை கிடைத்ததும் வாசகர்களுக்கு [illegible] மேற்படி சம்பளக் கமிஷன் அறிக்கைகளை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றோ, அல்லது அதன் அடிப்படையில் சென்னை அரசாங்க ஊழியர்களின் சம்பள உயர்வு [illegible] பற்றி பரிசீலிக்கப்படும் [illegible] மேற்கொண்டுள்ள [illegible] பொதுக்கூட்டத்தில் தெரிவிக்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

அரசாங்க ஊழியர்களுக்குச் சம்பள உயர்வு அளிக்கக்கூடும் என்றால் [illegible] வருமென்றும், அல்லது மக்கள் மீது அதிக வரி பளு சுமத்த வேண்டி வருமென்றும், [illegible] மத்திய சர்க்கார் மான்யம் தர வேண்டுமென்றும் [illegible] அரசாங்க ஊழியர்களின் சம்பள உயர்வுக்கு [illegible].

ஆந்திராவில் சர்க்கார் அமைத்த சம்பள ரிவிஷன் கமிட்டியின் சிபாரிசுகளை ஏற்றுக்கொள்வோம் என்று மந்திரி அறிவித்துள்ளார். மின்சார ஊழியர் சம்பள உயர்வு ரூ 10 முதல் 13 வரை சம்பள உயர்வு சிபாரிசு செய்து அறிக்கை சமர்ப்பித்துள்ளது.

## பர்மாவில் நடப்பதென்ன?

பர்மாவில் ஆட்சியை ராணுவத் தளகர்த்தரிடம் ஒப்படைப்பதென்று பிரதமர் ஊநூ செய்த முடிவு எல்லாப் பத்திரிகைகளிலும் பெரிய தலைப்புகளுடன் வெளிவந்தன. "நாட்டைக் கம்யூனிஸ்டுகளிடமிருந்து காப்பாற்றுவதற்காக ஊநூ நடத்திய ரத்தம் சிந்தாத புரட்சி," என்றெல்லாம் ஒரு சில இந்தியப் பத்திரிகைகள் மனக்களிப்புடன் எழுதின.

ஆயினும் பர்மாவில் இந்த மாறுதல் ஏற்படுவதற்கான சூழ்நிலைமைகளையும், அதைத் தொடர்ந்து நடைபெற்ற சம்பவங்களையும், ஊநூ, ஜெனரல் நீவின் ஆகியோரின் சந்தேகத்திற்கிடமில்லாத பிரகடனங்களையும் பரிசிலனை செய்துபார்த்தால், பர்மிய சம்பவங்களைப்பற்றி கம்யூனிஸ்ட்-எதிர்ப்பாளர்கள் அடைந்த குதூகலத்திற்குக் கொஞ்சமும் இடமில்லை என்பது தெளிவாகும்.

கடந்த ஜூன் மாதத்தில் பர்மிய ஆளுங் கட்சியில் ஊநூ தாகின் டின் குரூப், ஊபாஸ்வே-ஊக்யா நியீன் குரூப் என்று பிளவு ஏற்பட்டதை வாசகர்கள் அறிவர். இதன் காரணமாக ஜூன் 9-ந் தேதியன்று பார்லிமெண்டில் நடைபெற்ற ஓட்டெடுப்பில் ஊபாஸ்வேயின் குரூப் தோல்வியடைந்தது. ஊநூ தலைமையில் மீண்டும் புதிய மந்திரி சபை ஏற்பட்டது.

### ஆளுங் கட்சியில் பிளவு

இதைத் தொடர்ந்து ஆளுங் கட்சியாகிய பாசிஸ்ட்-எதிர்ப்பு மக்கள் விடுதலைக் கட்சி அதிகார பூர்வமாகவே, ஊநூ கோஷ்டி என்றும், ஊபாஸ்வே கோஷ்டி என்றும் ஒன்றையொன்று கடுமையாக எதிர்க்கும் இரண்டு கோஷ்டிகளாகப் பிளவுபட்டது.

இந்த நெருக்கடியில் ஊநூ மந்திரி சபை தப்பிப் பிழைத்தாலும் குறைந்த மெஜாரிடியாகிய எட்டு ஓட்டுகளில்தான் அது உயிர் வாழ முடிந்துள்ளது. ஆகவே மிகவும் வலதுசாரிப் பிற்போக்காளர்களாகிய ஊபாஸ்வே கோஷ்டியினர் பூரணமாகத் தோற்கடிக்கப்படவில்லை என்பதையே இது காட்டுகிறது.

### பிற்போக்காளர் பயமுறுத்தல்

இந்தப் பிற்போக்காளர்கள் அரசாங்கப் பதவியிலிருந்து வெளியேற்றப்பட்டபோதிலும், இன்னும் பலமுடையவர்களாக இருப்பதால், நிலைமையை அப்படியே ஒப்புக்கொள்ள விரும்பவில்லை. அவர்கள் தங்கள் கைவரிசைகளைக் காட்ட ஆரம்பித்தனர். ஏற்கனவே 10 ஆண்டுகளாக உள்நாட்டுச் சச்சரவு நீடித்துவந்தது. ஆகவே உள்நாட்டு அமைதி எப்பொழுது ஏற்படும் என்று மக்கள் ஆவலுடன் காத்திருந்தனர். மேலும், நவம்பரில் பொதுத் தேர்தல்கள் நடைபெறும் என்று ஏற்கனவே அறிவிக்கப்பட்டிருந்தது. அதையும் மக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். இந்நிலையில் ஊபாஸ்வே கோஷ்டியினர் நாட்டில் ஒரு உள்நாட்டுக் கலகத்தைக் கட்டவிழ்த்துவிடப் போவதாக பயமுறுத்தினர்.

### தேர்தல் ஒத்திப்போடப்பட்ட காரணம்

ஆகவேதான் பிரதமர் ஊநூ, ஜெனரல் நீவினிடம் அரசாங்கப் பொறுப்பை ஒப்படைப்பது சம்பந்தமாக செய்த ரேடியோ ஒலிபரப்பில், "நாட்டில் இன்றுள்ள நிலைமைகளின் காரணமாகவும், தொடர்ந்து ஏற்பட்டுள்ள பல சம்பவங்களின் காரணமாகவும், நவம்பரில் நடைபெற விருக்கும் பொதுத் தேர்தல்கள் சுதந்திரமாகவும், நேர்மையாகவும் நடைபெற முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது" என்று தெளிவுபடுத்தினார். ஆறு மாதங்களுக்குள் பொதுத்தேர்தல்கள் நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படி ஜெனரல் நீவினைக் கேட்டுக் கொண்டார்.

### கட்சி சார்பற்ற சர்க்கார்

நாம் கவனத்திலெடுத்துக் கொள்ள வேண்டிய ஒரு முக்கிய உண்மை என்னவெனில், ஊநூவைத் தலைவராகக் கொண்ட பாசிஸ்ட் எதிர்ப்பு மக்கள் விடுதலைக் கட்சி, ஜெனரல் நீவினின் மந்திரி சபையில் சேருவதில்லையென்று முடிவு செய்தது. நீவின் மந்திரி சபையில் பெரிய அரசியல் கட்சிகளின் எந்தப் பிரதிநிதியும் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. இத்தகைய ஒரு பராமரிப்பு சர்க்கார், பொதுத் தேர்தல் வரையிலும், எந்தக் கட்சிக்கு சாதகமாகவும், அல்லது எந்தக் கட்சியுடனும் கூட்டுறவாகவும் செயல்படாது என்று ஜெனரல் நீவின் வலியுறுத்தினர்.

மேலும், ஐ. நா.வில் உள்ள பர்மிய நிரந்தரப் பிரதிநிதி, சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கையில் எவ்வித மாறுதலும் இராது என்று தனக்குத் திட்டவட்டமான தாக்கீது வந்துள்ளது என்று அறிவித்தார்.

### பொறுத்திருந்து பார்ப்போம்

இந்நிலையில் பர்மாவிலுள்ள நிதானஸ்தர்களும், நடு நிலையிலுள்ள கட்சிகளும், வரப்போகும் பொதுத் தேர்தல்களில் இடதுசாரிக் கட்சிகளுடன் கூட்டுறவாக நின்று போராடப் போகிறார்களா அல்லது வலதுசாரிப் பிற்போக்காளர்களின் பக்கம் சேர்ந்துவிடுவார்களா, என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

("நியூஏஜ்")

## கேள்வி-பதில்

திருப்பூர் ரா. அறிவானந்தன்.

கேள்வி: ஒவ்வொரு கம்யூனிஸ்டும் தன் வாழ்க்கையில் கம்யூனிஸ குணுஞ்சங்களைக் கடைப்பிடிக்கவேண்டும் என்கிறது கம்யூனிஸ்டுக் கட்சியின் புதிய அமைப்பு விதி. கம்யூனிஸ குணும் சங்கள் என்றால் என்ன?

பதில்: கம்யூனிஸ குணங்கள் என்பவை மிக உயர்ந்த மனிதப் பண்பின் வழி நிற்கும் குணங்களையே குறிப்பிடுகின்றன. பாரத சமுதாயத்தில், தமிழ் நாகரிகத்தில் தோன்றிய சிறந்த பண்புகளின் வழியுள்ள குணங்களே அவை. நேர்மை, தன்னடக்கம், சேவா உணர்ச்சி, கட்டுப்பாடு ஆகிய அருங்குணங்களையே இங்கு குறிப்பிடப்படுகிறது.

* *

எ. சுப்ரமணியம், பி. பெரியசாமி, திருப்பூர்.

கேள்வி: தமிழ் வளரப் பாடுபடும் கம்யூனிஸ்டுக் கட்சி ஏன் தன் பெயரைத் தமிழில் மாற்றிக் கொள்ளவில்லை என்று ஒரு தி.மு.க. பொதுக்கூட்டத்தில் பேசினர் பதில் என்ன?

பதில்: 'திராவிடம்' என்ற சொல், தமிழ்ச்சொல் அல்ல. காங்கிரஸ் என்ற சொல் தமிழ்ச் சொல் அல்ல. 'காங்கிரஸ்' என்றால் 'மகாநாடு' என்று பொருள். காங்கிரஸ்காரர்கள் 'மகாநாட்டார்' என்று தமிழில் பெயர் வைத்துக் கொள்ளவில்லை. 'கம்யூனிஸம்' என்ற சொல்லிற்கு சிலர் பொது உடைமை என்று பொருள் கூறுவது சரியல்ல. எல்லா உடைமைகளையுமே பொதுஉடைமையாக்குதல் என்ற கருத்தில் அவ்வாறு பொருள் கூற முற்படுகின்றனர். அது தவறு. சகல உற்பத்தி சாதனங்களையும் சமூகத்தின் பொது சொத்தாக்குவது என்ற லட்சியத்தை கம்யூனிஸ்டுக் கட்சி முன் வைத்துள்ளதே தவிர, சகல உடைமைகளையுமல்ல.

எனவே தமிழிலும் 'கம்யூனிஸ்டுக் கட்சி' என்ற சொல் அதன் பூரணமான உண்மையான கருத்துடன் அப்படியே இருப்பது தான் சிறந்தது.

'கம்யூனிஸ்டுக் கட்சி' என்ற ஒரு கட்சியே இருக்கக் கூடாதென்று கருதுபவர்கள்தான் இத்தகைய பிரச்சாரம் செய்கிறார்கள் என்பதை நீங்கள் மறந்து விடவேண்டாம்.

—கே. எம்.

## குறிப்புகள்

## கேரளக் காங்கிரஸ் சாயம் வெளுக்கிறது!

கேரளத்திலுள்ள ஆயிரக்கணக்கான பள்ளி ஆசிரியர்கள் தனியார் நிர்வாகங்களின் கீழ் பல ஆண்டுகளாக அல்லலுற்று வந்தனர். நியாயமாகத் தங்களுக்கு சேர வேண்டிய சம்பளமும்-பட்டினிச் சம்பளமும்—முழுதும் கிடைக்காமல் கஷ்டப்பட்டு வந்தனர். பள்ளிக்கூட மானேஜர் நினைத்தால் எந்த ஆசிரியரையும் வேலையை விட்டு எவ்விதக் காரணமும் கூறாமல் நிறுத்திவிட முடியும். ஆசிரியர்களை வேலைக்கு வைத்துக் கொள்வதிலும் லஞ்ச ஊழல்கள் மலிந்து கிடந்தன. கம்யூனிஸ்ட் ஆட்சி வருகின்ற வரையில் தனியார் நிர்வாகப் பள்ளி ஆசிரியர்களின் நிலைமை 'நித்ய கண்டம் பூர்ணஆயுசு' ஆகத்தான் இருந்தது என்றால் மிகையாகாது.

இந்நிலைக்கு முற்றுப் புள்ளி வைக்க கேரளக் கம்யூனிஸ்ட் சர்க்கார் விரும்பினர். உபாத்தியாயர்களுக்கு வேலை உத்திரவாதமும், சம்பள உத்திரவாதமும் கொடுக்க விரும்பினர். கல்வித் துறையில் இருந்த இன்னும் பல குறைபாடுகளையும் போக்க விரும்பினர். ஆகவே புதிய கல்விமசோதாவை கல்வி அமைச்சர் ஜோஸப்முண்டசேரி கொண்டுவந்தார்.

தங்கள் ஆதிக்கத்திற்கும், சுரண்டலுக்கும் ஆபத்து வருகிறதை கத்தோலிக்கப் பாதிரிமார்களும், இதர அரசியல் எதிரிகளும், இந்தக் கல்வி மசோதாவுக்கு எதிராக ஒரே கூப்பாடு போட்டனர். இது தனி மனித உரிமையை, சுதந்திரத்தைப் பறிக்கிறதென்றும், இந்திய அரசியல் சட்டத்திற்கே விரோதமானதென்றும் ஏகக் கூச்சல் போட்டனர்.

பிறகு முறையாக சட்ட சபையில் மசோதா நிறைவேற்றப் பட்டபின், அதைகேரளச் சர்க்கார் ஜனாதிபதியின் அங்கீகாரத்திற்கு அனுப்பி வைத்தனர். ஜனாதிபதி சுப்ரீம் கோர்ட்டுக்கு அனுப்பி வைத்தார். சுப்ரீம் கோர்ட்டில், மசோதாவின் எதிர்ப்பாளர்களின் வாதங்களும், கேரள சர்க்காரின் வாதங்களும் பரிசீலனை செய்யப் பட்டபின், மசோதாவின் இரண்டே இரண்டு சரத்துக்கள் மட்டும் அரசியல் சட்டத்தின் வரம்பை மீறுவதாகத் தீர்ப்புக் கொடுக்கப்பட்டு மசோதா மீண்டும் கேரளச்சர்க்காருக்கே திருப்பி அனுப்பப்பட்டது.

கேரளச் சர்க்கார், சுப்ரீம் கோர்ட்டின் ஆலோசனைக்கேற்ப மசோதாவைத் திருத்தி அமைத்தது. திருத்தப்பட்ட மசோதா அடுத்த சட்டசபைக் கூட்டத்தில் மீண்டும் விவாதத்திற்கு வரவிருக்கிறது.

நியாயபுத்தியும், நேர்மையுள்ளமும் உடைய யாரும் திருத்தப்பட்ட கல்வி மசோதாவை அப்படியே ஏற்றுக்கொள்ளத்தான் செய்வர். எத்தகைய ஆட்சேபணையையும் கிளப்புவதற்கு இடமில்லை.

ஆனால் கேரளச் சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் தலைவர் பி. டி. சாக்கோ, திருச்சூரில் அண்மையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில், கல்வி மசோதா சுப்ரீம் கோர்ட் ஆலோசனையின் படி திருத்தப்பட்ட ரூபத்தில் வந்தாலும், காங்கிரஸ் கட்சி அதை முழு மூச்சுடன் எதிர்க்கப்போகிறது என்று கூறியுள்ளார்.

சுப்ரீம்கோர்ட் தீர்ப்பின் வெளிச்சத்தில் திருத்தப்பட்ட மசோதாவையும் முழுமூச்சுடன் எதிர்க்கப் போவதாக சாக்கோ கூறுவது, அவருடைய கேரளக் காங்கிரசினுடைய சுயரூபத்தையே தோலுரித்துக் காட்டுகிறது.

கல்வி மசோதாவிற்கு அவர்களின் எதிர்ப்பு நியாயத்தையோ நேர்மையையோ அடிப்படையாகக் கொண்டதல்ல; ஆனால் எப்படியாவது கம்யூனிஸ்ட் சர்க்காரை எதிர்க்க வேண்டும்; கம்யூனிஸ்ட் சர்க்கார் கொண்டுவரும் ஒவ்வொரு மசோதாவையும் எதிர்க்க வேண்டுமென்ற அவர்களின் கண்மூடித்தனமான, மூர்க்கமான போக்கையே இது மீண்டும் எடுத்துக் காட்டுகிறது.

(வி. ஆர்.)

## பி. சோ. தலைவர் ஜெயப்பிரகாஷுக்கு வரவேற்பு

### வரவேற்புக் கமிட்டியில் பிரபல முதலாளிகளும் உளர்

சென்னை, அக். 19—

பிரஜா சோஷலிஸ்ட் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயணுக்கு 23-10-58-ல் மைலாப்பூர் உட்லண்ட்ஸ் ஓட்டலில் ஓர் விருந்து நடக்கப் போகிறது. இந்த விருந்தை நடத்த ஒரு கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. அக்கமிட்டியில் சென்னை அமைச்சர்கள் காமராஜ் பக்தவத்சலம், சி. சுப்ரமண்யம் ஆகியோரும், பி. சோ. கட்சித் தலைவர்களான வி. ஆர். ராதாகிருஷ்ணன், ஏ. சுப்ரமண்யம், விஜயலெக்ஷிமி ஆகியோரும், மற்றும் பலரும் இருக்கிறார்கள்.

### முதலாளிகளும் கூட

அத்துடன் பி. சோ. தலைவரை உபசரிக்க அக்கமிட்டியில், பிரபல பேங்க் முதலாளியும், கிலப்பிரபுவும், தொழில் அதிபருமான ராஜா சர். எம். ஏ. முத்தையாச் செட்டியாரும், சென்னை நகரில் ஏராளமான பங்களாக்களுக்குச் சொந்தக்காரரும் டி. ஐ. சைக்கிள் பாக்டரி பங்குதாரரும், பேங்கரும், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி அதிபரும், ஓசியானிக் ஓட்டல் பங்குதாரருமான ஏ. எம். எம். முருகப்பச் செட்டியார், தினமணி, இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையதிபர் ராமநாத் கோயங்கா, மில் முதலாளி டி. சி. கோத்தாரி, பங்கு மார்க்கெட் காரர்களான மோகன்லால் மேத்தா, போபாட்லா ஷா, பேங்க் இன்ஸ்யூரன்ஸ் முதலாளி ஜே. எஸ். படேல், அப்புறம் ராஜாசர் எம். ஏ. முத்தையாச் செட்டியாரின் மகன் குமாரராஜா எம். ஏ., எம். முத்தையா செட்டியார் ஆகியோர்களும் ஜெயப் பிரகாசருக்கு வரவேற்பளிக்கும் கமிட்டியில் உள்ளனர்.

## ஹிந்துஸ்தானி பற்றி மத்திய அமைச்சர் ஹுமாயூன் கபீர்

அலகாபாத், அக். 19—

இந்திய சர்க்காரின் கலாசார மந்திரி ஹுமாயூன் கபீர் இங்கு பேசுகையில், ஹிந்துஸ்தானிதான் இந்தியாவின் தேசியமொழி ஆக முடியுமே தவிர, சமஸ்கிருத மயமாக்கப்பட்டுள்ள ஹிந்தி அல்ல என்று கூறினர். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு இந்தியனும் பெருமை கொள்ள வேண்டிய மொழி என்றார்.

## ஆசிரியருக்குக் கடிதங்கள்

### போலீஸாரும், காங்கிரசாரும் சிந்திக்கட்டும்!

ஐயா,

மதுரை ஜில்லாவில் பல கிராமங்களில் பஞ்சாயத்போர்டு தேர்தல்கள் நடந்து முடிந்துவிட்டன. அதற்குப் பிறகு விரும்பத்தகாத விபரீத சம்பவங்கள் பல அடுக்கடுக்காக அனுதினமும் நடந்து கொண்டு வருகின்றன.

மக்கள் தங்கள் பிரதிநிதிகளாக கம்யூனிஸ்டுகளைப் பெருவாரியாகத் தேர்ந்தெடுத்தனர். ஜனங்கள் மத்தியில் நேரடியாக நடமாட முடியாதவர்கள், பிற்போக்காளர்கள் அத்தனை பேரும் தோல்வி கண்டனர். வளர்ந்து வரும் நமது கட்சியின் செல்வாக்கினைக் கண்டு மனந்தளர்ந்துவிட்டவர்கள் தங்கள் தோல்வியினால் ஏற்பட்ட ஆத்திரத்தில் எப்படியும் கம்யூனிஸ்டுகளை ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணத்தில் காங்கிரஸ் கோட்டைக்குள் புகுந்து கொண்டு, அதன் பக்க பலத்துடன் பொய்களையும், புனைச் சுருட்டுகளையும் தாராளமாகக் கட்டவிழ்த்துவிட ஆரம்பித்திருக்கின்றனர்.

கம்யூனிஸ்டுகள், தேசியக் கொடியை எரித்தார்கள், அவர்கள் இயக்கப்பாட்டுகளைப் பாடி காங்கிரஸாரை மக்கள் முன்னிலையில் இழிவுபடுத்தினார்கள், வைக்கோற்போருக்குத் தீ வைத்தார்கள், பலாத்காரமாக அடித்து ஹிம்சித்தார்கள் என்றெல்லாம் சொல்லி பொய் வழக்குப் போட்டிருக்கிறார்கள். இதற்குப் போலீஸாரும் உதவுகின்றனர்.

ஏனெனில் 'ஆதாரமற்ற கற்பனைச் சரக்கு' என்று தெரிந்த பின்னுங்கூட, 'நாங்களென்ன செய்வது? ஆளும் கட்சியினரின் சொல்லுக்கு நாங்ககள் மதிப்புத்தர வேண்டும். நீங்கள் நீதிமன்றத்தில் வழக்காடிப் பார்த்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லிவிட்டு, போலீஸார் ஜாமீன் வழக்குப் போடுகின்றனர். இது நியாயமாகுமோ?

கேரளத்தில் அராஜகம் தாண்டவமாடுகிறது. சொத்துகளுக்குப் பாதுகாப்பும் பந்தோபஸ்தின்மையும் நிலவுகிறது என்று தொண்டை கிழிய வரட்டுக் கூச்சலிடும் காங்கிரஸ்காரர்கள் இங்குள்ள நிலைமையைக் கவனித்துப் பார்க்கட்டும்! சத்தியத்தின்மேல் காந்தியின்மேல் நம்பிக்கையுள்ளவர்களாக இருந்தால், இத்தகைய புண்ணிய கைங்கரியங்களில் இறங்கமாட்டார்கள்.

இத்தகைய நிலைமை மேலும் நீடிக்குமானால், அது மக்களின் பொறுமையை சோதிப்பதாகும். பொதுமக்களுக்கு ஒரு பெரும் அறைகூவலாகும். போலீஸாரும், காங்கிரஸ் கட்சியினரும் தங்கள் நிலைமையைப் பற்றி மீண்டும் ஆலோசிக்கட்டும்.

வ. ரா. சுந்தரகிரி,
சிந்தாமணி.

### வெங்காய ஏற்றுமதியில் நியாயம் வழங்குக

ஐயா,

நாகப்பட்டினம் துறைமுகத்தில் மாதம் 1க்கு ஏற்றுமதியாகும் 2 கப்பல்களிலும் வெங்காய ஏற்றுமதி விஷயமாக சிறு ஏற்றுமதி வியாபாரிகளுக்கு இடவசதி, நேர்மையான, நீதியான முறையில் கிடைக்க வேண்டுமென்று பல நாட்களுக்கு மேலாக சாத்வீகமான போராட்டம் நடத்தப்பட்டு வருகிறது. பொதுமக்களில் பலரும் அதற்கு ஆதரவாக இருந்துவருகின்றனர். ஆனால் வெங்காய ஏற்றுமதிக்கு இடவசதி அளிப்பதில் நாகையிலுள்ள கப்பல் கம்பெனி ஏஜெண்டுகள் எல்லா வியாபாரிகளுக்கும் அனுகூலமான "Pro Rata Basis"ல் அலாட்மெண்ட் செய்ய ஏன் மறுக்கிறார்கள் என்பதன் காரணம் புரியவில்லை. வெங்காய ஏற்றுமதிக்கு இடவசதி அளிக்கும் விஷயமாக சிறு வியாபாரிகள் கப்பல் கம்பெனி மேனேஜருக்கும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் குறைகளை தெரிவித்தவண்ணமே உள்ளனர். ஆனால் அதற்கு உடனடியான நிவாரணம் கிடைத்ததாகத் தெரியவில்லை. நாகையிலுள்ள சிறு வியாபாரிகள் நாகை சேம்பர் ஆப் காமர்ஸுக்கும் தங்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் அநீதிகளை அறிவித்திருந்தும், நேரில் கூறியிருந்தும்கூட உடனடியான, துரிதமான, நடவடிக்கை எடுத்து, கவனித்து இது விஷயமாக, உடனடியான பரிகாரம் தேடுவதாகத் தெரியவில்லை. சிறு வியாபாரிகளில் சிலர் பத்திரிகை வாயிலாகவும் தெரிவித்திருந்தார்கள். நீதி கிட்டவில்லை. எனவேதான் சிறு வியாபாரிகள் பாரத பிரதம மந்திரிக்கும், மற்றும் உயர்தர அதிகாரிகளுக்கும் "தந்தி" மூலமாக குறைகளை தெரிவித்ததாகத் தெரிகிறது. எனவே இனியாவது நாகையிலுள்ள கப்பல் கம்பெனி ஏஜெண்டுகள் வெங்காய ஏற்றுமதி சம்பந்தமாக சிறு ஏற்றுமதியாளர்களின் குறைகளை அறிந்து அது விஷயமாக நல்லதொரு முடிவை செய்வார்களென எதிர்பார்க்கலாமா?

நாகை துறைமுகத்தில் வெங்காய ஏற்றுமதி விஷயத்தில் சிறு வியாபாரிகளுக்கு கப்பல் கம்பெனி ஏஜெண்டுகள் தரும் அனுவசிய அநீதியை அரசாங்கம் உடனடியாக தனது செல்வாக்கினால் தடுத்து நிறுத்தி, நீதி கிடைக்க ஆவன செய்யுமா?

எஸ். வி. துரைசாமி நாடார்,
நாகப்பட்டினம்.

## உரைகல்

"அரிச்சந்திரா! ஒரே ஒரு பொய் சொல். உன்னை ஏழேழு லோகங்களுக்கும் ஏகச் சக்ராதிபதியாக்கிவிடுகிறேன். சொர்க்கத்தை உன் காலடியில் கொண்டு வந்து சேர்ப்பிக்கிறேன்" என்று எவ்வளவோ கஜகர்ணம் கோகர்ணம் போட்டுப்பார்த்தார் விசுவாமித்திரர்.

ஆனால் அரிச்சந்திரனே, சொத்து சுகம், நாடு, வீடு, மனைவி மக்கள் எல்லாவற்றையும் இழந்து, சுடலை காக்கும் பராரியாக நின்ற நிலையிலும் பொய்மட்டும் சொல்ல மறுத்துவிட்டான்.

இது அரிச்சந்திர புராணம். ஆனால் சத்தியத்தின் மொத்த வியாபாரிகள் என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ்காரர்களின் புராணமோ இதற்குத் தலைகீழ்ப் பாடமாக இருக்கிறது!

இன்று கேரளத்தில் காங்கிரஸ்காரர்களிடமிருந்து மருந்துக்குக் கூட ஒரு உண்மையை எதிர்பார்க்கமுடியாதுபோலிருக்கிறது! அந்த அளவுக்கு அடாது பெய்யும் அடை மழைபோல் விடாது பொய்களையும் புனைச் சுருட்டுகளையும் பொழிந்துகொண்டிருக்கிறார்கள்!

இந்த வகையில், காங்கிரஸ்காரர்களின் 'சத்தியமேவ ஜெயதே' தொழிற்சாலையிலிருந்து ஒரு புதுமாதிரியான புளுகுகுண்டு இப்போது தயாராகி வெளிவந்திருக்கிறது. அது என்ன தெரியுமா?

கேரளத்திலே ஒரு இளம் பெண் கற்பழிக்கப்பட்டுக் கொல்லப்பட்டாளாம். இந்தக் கொலை சம்பந்தமாக குற்றம் சாட்டப்பட்டவர்கள் அனைவரும் கம்யூனிஸ்டுகளாம். இந்த சம்பவம் பற்றி மிகப் பெரிய போலீஸ் அதிகாரிகளே விசாரித்தார்களாம். குற்றவாளிகள் தண்டனையின்றி தப்புவதற்கு மந்திரிகளே நேரடியாகத் தலையிட்டதாகவும் கூறப்பட்டதாம். இது கோழிக்கோடு செஷன்ஸ் நீதிபதி அன்னுசாண்டியின் தீர்ப்பிலேயே சொல்லப்பட்டிருக்கிறதாம்.

இப்படி எர்ணுகுளத்திலிருந்து வெளிவரும் 'வீக்லி கேரளா' என்னும் ஆங்கில வார ஏடு தனது செப்டம்பர் 27ம் தேதி இதழில் ஒரு பரபரப்பூட்டும்செய்தி வெளியிட்டிருக்கிறது.

இந்த செய்தி கேரள சர்க்காரின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டதும் உடனே அன்னுசாண்டியின் தீர்ப்பு வரவழைக்கப்பட்டு, கவனமாக பரிசீலனை செய்யப்பட்டது. அதிலே 'வீக்லி கேரளா'வில் கண்டுள்ளதுபோல ஒருவரிகூடக் காணோம்! குற்றம் சாட்டப்பட்டவர்கள் கம்யூனிஸ்டுகளென்றோ, அவர்கள் சார்பாக மந்திரிகள் தலையிட்டார்கள் என்றோ எந்தவித பிரஸ்தாபமும் இல்லை!

அதற்குப் பதிலாக, வேறு சில ருசிகரமானத் தகவல்கள்தான் கிடைத்தன. அதாவது இந்த வழக்கிலே பிரதானமாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்தவர்களிலேஒருவர்மாஹியைச்சேர்ந்த பிரபல காங்கிரஸ்காரர்! அது மட்டுமல்ல. இந்த வழக்கில் விசேஷ கவனம் செலுத்தி, தீவிரமாக புலன் விசாரணை நடத்தி குற்றவாளிகளைக் கூண்டிலேற்ற வேண்டுமென்று ஓயாது சர்க்காரை வற்புறுத்தி வந்தவர் ஒரு கம்யூனிஸ்ட் எம். எல். ஏ., எம். குமரன்!

உண்மை இவ்விதமிருக்க 'வீக்லி கேரளா' துணிந்து இந்தப் பித்தலாட்டத்தைச் செய்திருக்கிறது. இதற்காக சர்க்கார் நடவடிக்கை எடுத்தாலும் பரவாயில்லை, இந்த அபாண்டத்தைக் கூறி ஒரு சிலரையாவது நம்ப வைத்தால் அதுவே போதும் என்று இந்தப் பத்திரிகை இந்த இழிசெயலில் இறங்கியுள்ளது.

அதுவும் இந்தப் பத்திரிகையை நடத்துபவர்கள் யார் தெரியுமா? பனம்பள்ளி கோவிந்த மேனன், களத்தில் வேலாயுத நாயர், ஜியார்ஜ் தாமஸ் கொட்டுகாப்பள்ளி எம்.பி., பி. சி. செரியன் முதலிய கேரள காங்கிரஸ் தலைவர்கள் 'ஜனநாயக பிரசுர லிமிடெட்' என்ற கம்பெனி ஆரம்பித்து அதன் சார்பாக 'இந்த ஏடு பிரசுரிக்கப்பட்டு வருகிறது. இவ்வளவு பொறுப்புவாய்ந்த காங்கிரஸ் தலைவர்கள் நடத்தும் பத்திரிகை இப்படி ஆதாரமற்ற அபத்தங்களை அள்ளித் தெளித்து வருகிறதென்றால் என்ன சொல்வது! அய்யோ, செக்கிழுத்த சிதம்பரமும், கொடி காக்க உயிர் கொடுத்த குமரனும், நெஞ்சிலே தடியடி ஏந்தி வீரமரணம் எய்திய லஜபதியும் கண்ணீரும் செந்நீரும் சிந்தி கட்டிவளர்த்த காங்கிரசே, பதவிவெறி உன் கண்களை இப்படியா மறைக்க வேண்டுமென்று பரிதாபப்பட வேண்டியிருக்கிறது!

இதிலே வேதனையூட்டும் வேடிக்கை என்னவென்றால், காங்கிரஸ் தலைவர் தேபர்தான் சமீபத்தில் இந்த ஜனநாயக பிரசுராலய லிமிடெட்டை துவக்கிவைத்து, இந்த ஸ்தாபனம் நாடெங்கும் உண்மையைப் பரப்பும் நற்பணியை அஞ்சாநெஞ்சோடுசெய்ய வேண்டுமென்று அருள்மொழி சுரந்தார்!

அவரது உபதேசப்படி கேரள காங்கிரஸ் உத்தமர்கள் 'உண்மை'யைப் பரப்பிவரும் லட்சணத்தைத்தான் இப்போது பார்த்தீர்களல்லவா!

—மாஜினி.

## நவீன அரிச்சந்திர புராணம்!

எனவே, ஒன்றும் செய்யமுடியாது என்று எவ்வளவு காலந்தான் சென்னை மந்திரிகள் காலத் தாழ்த்த முடியும்?

தமிழ்நாடு என். ஜி. ஓ. க்கள் வேலை நிறுத்தப் போராட்டத்தை வாபஸ் பெற்றுக்கொண்ட போதிலும் சேலத்தில் கூடிய மகாநாட்டிலே, மீண்டும் வேலை நிறுத்தப் போராட்டத்தில் இறங்குவோம் என எச்சரிக்கை செய்துள்ளனர். இது அவர்களிடத்தில் அதிருப்தியின் ஆழத்தைக் காட்டுகிறது.

நிதிமந்திரியை இந்நிலைமை அசைத்துள்ளன என்பதில் ஆச்சரியமில்லை. இரண்டாவது சம்பளக் கமிஷன் அறிக்கை வந்ததும், அதனடிப்படையில் சம்பள உயர்வளிக்கத் திட்டம் வைத்திருப்பதாக மந்திரி சொல்கிறார். இந்த வாக்குறுதி நிறைவேற்றப்படும் என நம்புகிறோம்.

அரசாங்க நிர்வாகத்தில் தொண்ணூறு சத விகிதமுள்ள என். ஜி. ஓக்களிடம் அதிருப்தியை வளர்த்தால், அரசாங்க நிர்வாகத்தின் வேலைத் திறனையும், வேலைத்தரத்தையும் பாதிக்கும் என்பதை நிதி மந்திரி பார்க்கத் தவறக்கூடாது.

## சிவகாசியில் பாரதி-வினேபா விழா

சிவகாசி, அக். 17—

சிவகாசி நகர் பூதானக் கமிட்டியின் சார்பாக 24-9.58-ல் பாரதி வினேபா விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

இரவு நடைபெற்றப் பொதுக் கூட்டத்துக்கு ரெ. தெ. பெ. சுப்ரமண்யம் தலைமை வகித்தார்.

கட்டுரை, பாட்டு, பேச்சுப் போட்டிகளில் வெற்றிபெற்றவர்களுக்கு ஏ. சிதம்பரம் பரிசுகள் வழங்கினார்.

கூட்டத்தில் துரைசாமி, ம. மாரிமுத்து (கம்யூ) வே. கருணாகரன் (தி.மு.க.) ஏ. ரத்தினசாமி, தா. காளியம்மாள், அ. கோசலை அம்மாள் (திருப்புகழ், திருவருள் சங்கம்) தமிழாசிரியர் நல்லப்ப ரெட்டியார், நகரசபை உறுப்பினர் கே. கோபால், எஸ். எஸ். வி. குருசாமி ஆகியோர் பாரதி, வினோபா அடிகள் பற்றிப் பேசினர்.

வசந்தா, ருக்மணி ஆகியோர் வில்லுப்பாட்டுடன் விழா இனிது முடிந்தது.

## ரஷ்ய விமான விபத்து

### கொல்லப்பட்டவர் விபரம்

மாஸ்கோ, அக். 20—

கடந்த வெள்ளியன்று ரஷ்யாவில் ஏற்பட்ட விமான விபத்தில் 65 பிரயாணிகள் கொல்லப்பட்டனர், என்று நவசீன செய்தி ஸ்தாபனம் இன்றிரவு அறிவித்தது.

அவர்களில் 16 பேர் சீனர்கள். சீன சர்க்காரின் உதவி கலாசார மந்திரி செங் சென்டோவும் அவர்களில் ஒருவர். ஆப்கானிஸ்தானத்திற்கும், ஐக்ய அரபுக் குடியரசுக்கும் புறப்பட்ட சீனக் கலாசாரத் தூதுக்குழுவின் முக்கிய உறுப்பினர்களும் அவர்களில் உட்படுவர்.

கொல்லப்பட்ட இதர 49 பேர்கள் சீனவுக்கு அழைப்பின்பேரில் வந்த அயல்நாட்டு நண்பர்களும், அயல்நாட்டு நிபுணர்களுமாவர். அவர்கள் அந்த விமானத்தில் நாடு திரும்பிக்கொண்டிருந்தனர், என்றும் நவசீன செய்தி ஸ்தாபனம் அறிவித்தது. (இறந்தவர்களில் ஒரு பிரிட்டிஷ் பிரஜையும் உண்டு என்று பிரிட்டிஷ் வெளிநாட்டு இலாகா அதிகாரி ஒருவர் அறிவித்தார்.)

# 'திராவிடஸ்தான் கோரிக்கை அமெரிக்கா ஸ்தானக மாறும்

## திருப்பூரில் பி. டி. ரணதிவே பேச்சு

திருப்பூர், அக். 18—

திருப்பூரில் புஷ்பா தியேட்டரில் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்க உப தலைவர் திரு. ஏ. கணபதி அவர்கள் தலைமையில் தோழர் பி. டி. ரணதிவே அவர்களுக்கு 16-10-58 காலை 9-30 மணிக்கு செந்தொண்டர்களால்வரவேற்பு கொடுக்கப்பட்டு, நகர தொழிற்சங்கச் சார்பிலும் கட்சியின் சார்பிலுமாக சுமார் 182 பூமாலைகளும் சுமார் 15 கைத்தறி துண்டுகளும் அளிக்கப்பட்டு தோழர் பி. டி. ரணதிவே அவர்களை கௌரவிக்கப்பட்டது.

தோழர் பி டி. ரணதிவே அவர்கள் பேசுகையில்,

பல ஆண்டுகள் இந்தியா ஒற்றுமையாகப் போராடி சுதந்திரம் பெற்றது. சுதந்திரம் பெற்ற சில ஆண்டுகளில் திராவிட நாடு தனியாகப் பிரியவேண்டும் என்று சில சக்திகள் பிரச்சாரம் செய்கின்றன. இந்தக் கோரிக்கையானது நாம் பெற்ற சுதந்திரத்திற்கு ஆபத்து விளைவிக்கும் போக்காகும். பெற்ற சுதந்திரத்தைக் காப்பாற்றவும், ஜனநாயகம் நிலைத்திருக்கவும், சோஷலிஸம் ஏற்படவும் ஒரே சக்தியாக இருக்கவேண்டும் என்று வற்புறுத்தினர். மேலும் இன்று பாகிஸ்தான், பர்மா முதலிய நாடுகளில் ஏற்பட்டுள்ள நிலைமைகளை அவர் விவரித்துக் கூறினர். அமெரிக்கா இன்று இந்தியாவின் விஷயத்தில் தலையிட்டு வகுப்புவாத சக்திகளையும் ஏகபோக ஏகாதிபத்தியவாதிகளையும் தூண்டிவிட்டு இந்தியாவின் சுதந்திரத்திற்கு ஆபத்து விளைவிக்க ஏற்பாடு செய்கிறது என்றும் இங்கிலையில் திராவிட நாடு பிரிவினை கோரிக்கை வெற்றி பெறுமானால் அது திராவிடஸ்தானகமாக இருக்காது அமெரிக்கா ஸ்தானகமாறும் என்று அவர் கூறினர். (ந. கி.)

## தி. மு. க. விருந்து ராஜினமா

தேனி, அக். 17—

அக். 15ல் தேனியில் நடந்த ஊராட்சி மன்ற உறுப்பினர் தேர்தலில் நகர திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நடந்துகொண்ட போக்கை கண்டிக்கும் பொருட்டு தி. மு. க. செயற்குழு உறுப்பினர் பதவியிலிருந்தும் மத்தியக் கழக உறுப்பினர் பதவியிலிருந்தும் விலகிக்கொண்டு, அவைகளினின்றும் சகல தொடர்புகளையும் அறுத்துக்கொண்டதாக திரு க. வீரசிகாமணி என்பவர் எழுதுகிறார்.

## அக். 25, 26 தேதிகளில் கட்சி மாநாடும் கலை விழாவும்

தூத்துக்குடி, அக். 18—

தூத்துக்குடி நகரின் வட்டக் கிளை மாநாடுகள் முடிந்துவிட்டன.

நகர கம்யூனிஸ்ட் கட்சி மாநாடு அக்டோபர் 25, 26 தேதிகளில் 'டெம்பின்' தியேட்டரில் தியாகி பொன்னு அரங்கில் வெகு சிறப்பாக நடைபெறும். பல முக்கிய கம்யூனிஸ்ட் தலைவர்கள் கலந்து கொள்வார்கள். அக். 26-ம் தேதி மாலையில் அழகும் ஆர்ப்பாட்டமும் உள்ள பெரிய ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெறும்.

இரவு 10 மணிக்கு தூத்துக்குடி கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் சி. ஆர். முருகானந்தம் கதை வசனம் எழுதிய "வர்க்க பாசம்" என்னும் நாடகம் நடைபெறும். 'கல்பனா' கலைக் கழக நடிகர்கள் இதில் நடிப்பார்கள்.

# பக்தவத்சலனரிடம் கேள்வி கேட்ட சிறுவனை

## காங்கிரஸ்காரர்கள் அடித்த கொடுமை

திண்டுக்கல், அக். 19—

இங்கு நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் சென்னை போலீஸ் மந்திரி திரு. பக்தவத்சலம் காங்கிரஸ் தத்துவம் அஹிம்சை ஜனநாயகம் பற்றி எல்லாம் விளக்கமாகப் பேசினர். அவர் பேசவருகிற மேடைக்கு வரும்போதே தண்டபாணி என்ற சிறுவன் ஹார்வி தொழிலாளர்களை சுட்டது ஏன்? அதைப் பற்றிப் பேசுங்கள் என்றான். "சரி பேசுகிறேன்" என்று மேடையில் ஏறி இது பற்றி எதுவும் பேசாமல் மேற்கூறியவாறு உபதேசம் செய்துவிட்டு கீழே இறங்கினர். அங்கே சமயம் பார்த்து இருந்த சிறுவன் ஏன் ஹார்வி தொழிலாளர்களைச் சுட்டது பற்றிக் கூறவில்லை என்றான். இதற்கு மந்திரி "அதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை" என்று கூறி விட்டு காரில் பறந்தார்.

### மக்கள் தூற்றினர்

இதைப் பார்த்துக்கொண்டிருந்த ஏ. எஸ். எஸ். சிவசூரியநாராயண பிள்ளை (முனிசிபல் காங்கிரஸ் கவுன்சிலர்) வெங்கிடசாமி இன்னும் இருவர் ஆக நான்கு காங்கிரஸ்காரர்கள் அந்த சிறுவனை சுற்றி வளைத்துக்கொண்டு ஏன்டா கேள்வி கேட்டாய் என்று கூறி ஆவேசம் கொண்டு தாக்கினர்கள். இந்த அஹிம்சாமூர்த்திகளின் கோழைத்தனமான செய்கையைக் கண்டு மக்கள் தூற்றினர்.

## புதுவை மந்திரிசபை

### காங்கிரஸ் அதிருப்தியாளர் மூவருக்குப் பதவி

வேலூர், அக். 19—

புதுச்சேரி மந்திரிசபை அமைப்பது சம்பந்தமாக 'புதுச்சேரி சட்டசபை காங்கிரஸ்கட்சி சமர்ப்பித்த மந்திரிகள் ஜாபிதாவை முதல் அமைச்சர் காமராஜ் அங்கீகரித்தாரென்று தெரிகிறது. ஆறு மந்திரிகளில் மூவர் காங்கிரஸ் அதிருப்தியாளர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களென்றும் தெரிகிறது. இதர மூன்று மந்திரிகள் சட்டசபை காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருப்பர். (ந. கி.)

# காரைக்குடி தேர்தல் வழக்கு

மதுரை, அக். 16—

காரைக்குடி தொகுதியிலிருந்து சென்னை சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள திரு. எம். ஏ. முத்தையாச் செட்டியாரின் தேர்தல் செல்லாதென திரு. சா. கணேசன் வழக்குத் தொடர்ந்திருக்கிறார் என்பது தெரிந்ததே. இந்த வழக்குத் தொடர்ந்து மதுரை தேர்தல் மன்ற நீதிபதி திரு. பி. கே. சுப்பிரமணிய அய்யர் முன்பு நடைபெற்று வருகிறது என்பது தெரிந்ததே. இதுவரை மனுதாரின் சாட்சிகளே விசாரிக்கப்பட்டுள்ளனர். இன்றும் மனுதாரின் சாட்சிகளே விசாரிக்கப்பட்டனர்.

செனமேனி கிராமத்தைச் சேர்ந்த திரு. பெரிய அம்பலம் 97-வது சாட்சியாக விசாரிக்கப்பட்டார். அவர் தமது சாட்சியத்தில் கூறியதாவது: "தேர்தல் நடைபெறுவதற்கு முன் தினம் தான் ஆம்பக்குடியில் தனது சிறிய தாயாரைப் பார்ப்பதற்காக போனேனென்றும், அங்கு அவ்வூரைச் சேர்ந்த முத்து அம்பலம், நாராயண அய்யர், பொன்னையா அம்பலம் முதலியோர்கள் ஆம்பக்குடி முத்து அம்பலம் வீட்டிற்கு முன்பாக உட்கார்ந்திருந்தார்களென்றும், முத்து அம்பலத்திற்கும், பொன்னையா அம்பலத்திற்கும் ரூ. 2-8-0 கொடுத்து திரு. நாராயண அய்யர், "தேர்தலில் முத்தையாச் செட்டியாருக்கே வோட்டளிக்க வேண்டுமென்று பாலில் சத்தியம் செய்ய சொன்னர்" என்றும் சாட்சி கூறினர்.

குறுக்கு விசாரணையின்போது சாட்சி கூறியதாவது:—காரைக்குடி பழனியப்பன் அம்பலத்திடம் 1000 ரூ. கடன் வாங்கி, அதற்குப் பத்திரம் எழுதிக் கொடுத்திருக்கிறேன் என்றும் தன் பெயரிலுள்ள பட்டாக்களிலெல்லாம் பெரிய தம்பி என்று பெயர் எழுதப்பட்டுள்ளதென்றும், ஆம்பக்குடியிலுள்ள தன்னுடைய சிறிய தாயாரைப் பார்ப்பது தவிர தனக்கு அங்கு வேறு வேலை கிடையாது என்றும், தேர்தல் நடைபெறுவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே நாராயண அய்யரைத் தெரியும் என்றும் கூறினர். மேலும்தான் முத்து அம்பலத்தை எதற்காக ரூ. 2-8-0 வாங்கினீர்கள் என்று கேட்கவில்லை என்றும் சாட்சி கூறினர்.

காரைக்குடியைச் சேர்ந்த திரு. வைத்திலிங்க அம்பலம் தமது சாட்சியத்தில் கூறியதாவது:— காரைக்குடியில் எதிர் மனுதாரருக்குத் தேர்தல் அலுவலகம் ரூ. 75-ல் தான் அமர்த்திக் கொடுத்ததாகவும், திரு. சுப்பையா அம்பலத்தை எனக்குத் தெரியாது. நாட்டார்களுக்கு இரண்டு கட்சிகள் இருந்ததாகவும், அந்த கட்சிகள் பஞ்சாயத்தின் மூலம் அவர்கள் இராஜியாகப் போய்விட்டார்கள் என்றும், மெய்யப்பன் என் கட்சியைச் சேர்ந்தவர் என்றதான் கூறியதாக நினைவு இல்லை, பெரிய கருப்பன், சுப்பையா ஆகியோரும் தன் கட்சியைச் சேர்ந்தவர்கள் அல்ல.

இவ்வியாத்தம்பட்டி கிராமத்தைச் சேர்ந்த திரு. சின்னையா தமது சாட்சியத்தில் கூறியதாவது:—

தேர்தல் நடைபெறுவதற்கு 8 நாட்களுக்கு முன்பு இவ்வியாத்தம்பட்டியில் கிராம மக்கள் அடங்கிய கூட்டம் ஒன்று நடைபெற்றதென்றும், திரு. சுவாமிநாத அய்யரும், திரு. நாகலிங்க சேர்வையும் கூட்டத்தில் இருந்தனரென்றும் எதிர் மனுதாரருக்குத் தேர்தலில் கிராம மக்கள் அனைவரும் வாக்களித்தால் ரூ 5000 செலவில் சாவடி ஒன்று கட்டிக் கொடுப்பதாக திரு. சுவாமிநாத அய்யர் சொன்னர்.

தனக்கு வாக்குரிமையில்லையென்றும், மணப்பாறையிலுள்ள திரு வீரப்பச் செட்டியாரிடம் சமையல் வேலை பார்த்ததாகவும் குறுக்கு விசாரணையின் போது சாட்சி கூறினர்.

வழக்கு தொடர்ந்து 19-ந் தேதி நடைபெறும்.

# நாகை தாலுகா பஞ்சாயத் தேர்தல்களில் கம்யூனிஸ்ட் விவசாய சங்க ஊழியர்கள் வெற்றி

வேளூர், அக். 18

நாகை தாலுகாவில் சென்ற மாதம் தொடர்ந்து நடைபெற்ற பஞ்சாயத்துத் தேர்தல்களில் கம்யூனிஸ்டுகளும் விவசாய சங்க ஊழியர்களும், பலர் எதிர்ப்பின்றியும், சிலர் பலத்த போட்டியிலிருந்தும் வெற்றி பெற்றுள்ளனர். அதிகப்படியான ஸ்தானங்களைக் கைப்பற்றி வாகை மாலைசூடியவர்கள்

### மோகனூரிலே

இங்கு 6 ஸ்தானங்களில் தோழர்கள் எம். பெரியன், டி. குப்புசாமி, டி. சுப்பன், ஏ. செருப்பாடன், டி. சுப்பன், சிங்காரு ஆகிய 6 பேர்களும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### வெண்மணி

இங்கு 7 ஸ்தானங்கள். இதில் கே. ராமய்யன், எஸ். முத்துசாமி, கே. ரெங்கன், முத்துசாமி ஆகிய 4 பேரும், மற்றும் 3 பேரும் போட்டியின்றி வெற்றி.

### அணக்குடி

இங்கு 6 ஸ்தானம். தோழர்கள் வீ. ரெத்தினம், பி. கட்டப்பன், எஸ். காத்தான் ஆகியோரும், மற்ற மூவரும் போட்டியின்றி வெற்றி.

### மாணலூர்

இங்கு 6 ஸ்தானங்கள். பி. குஞ்சு (கம்யூ), டி. குஞ்சு, பக்கிரிசாமி, டி. தங்கராஜ், சோமசுந்தரம் ஆகிய 5 பேரும், மற்றொருவரும் போட்டியின்றி வெற்றி.

### சாட்டியக்குடி

இங்கு 7 ஸ்தானங்கள். கே. கோபால் (கம்யூ) ஏ. கோவிந்தராஜ், எஸ். கீத்தான், அப்பாசாமி, முத்து ஆக 5 பேர்களும் போட்டியின்றி வெற்றி. 3-வது வார்டில் மறுதேர்தல் நடைபெறும்.

### இலுப்பூர்

இங்கு 6 ஸ்தானங்கள். வை. கருவேலன், கு. காத்தான் ஆகிய 2 பேரும், மற்றும் 4 பேரும் போட்டியின்றி வெற்றி.

### கிள்ளுக்குடி

இங்கு 7 ஸ்தானங்கள், தோழர்கள் பி. செம்பொன்ராஜன் (கம்யூ), எஸ். குப்புசாமி, பி. ஆதி, எம். நடராஜன் ஆகிய 4 பேரும் போட்டியின்றி மத்தியில் வெற்றிபெற்றுள்ளனர்.

### திருக்கண்ணங்குடி

இங்கு 6 ஸ்தானங்கள். தோழர்கள் கே. பக்கிரிசாமி (கம்யூ), எஸ். சித்தன், வி. துரைசாமி, ஏ. முருகன் அம்பலக்காரர், ராமு இந்த ஐவரும், மற்றும் 3 பேரும் வெற்றிபெற்றனர்.

## மந்திரி கக்கனும் மகஜர் போராட்டமும்

நாகலாபுரம், அக். 16—

மந்திரி கக்கன் இங்கு வந்தார். அவரிடம் பொதுமக்கள் மகஜர் பல கொடுக்கலாம் என்று வந்தார்கள். மகஜர்களை வாசித்துக் கொடுக்க வந்தார்கள். ஆனால் மந்திரி கக்கன் மகஜரை வாசிக்கக்கூடாதென்றார். வாசிக்காவிட்டால் மக்களது குறைகள் அதிலுள்ளதா இல்லையா என்பது மக்களுக்கு எப்படி எவ்வாறு தெரியும் என்று தோழர் எஸ். முத்தையா கேட்டார். வாசித்தால் வாங்கமாட்டேன் என்று அடம் பிடித்தார். பிறகு வாசிக்காமலேயே நாகலாபுரம், பூதலபுரம், அச்சங்குளம், மாவிலோடை, புதுப்பட்டி, சின்னு வெளியக்காரர்பட்டி ஆகிய ஊர்களின் விவசாயிகளின் குறைகள் அடங்கிய மகஜர்களை வாங்கிக் கொண்டார்.

# மூன்றுவதுதிட்டம் இல்லாமற்போக இப்பொழுதே வேலைசெய்கிறார்கள்

## தஞ்சையில் ஏ. கே. கோபாலன்



தஞ்சாவூர், அக். 18—

"எதற்கெடுத்தாலும் பணமில்லை பணமில்லை யென்று சர்க்கார் கூறுகிறது. ஆனால், இந்த நாட்டில் 800 கோடி ரூபாய் மதிப்புள்ள கள்ளத்தங்கம் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. அதைக் கண்டுபிடித்துப் பயன்படுத்த, இந்த சர்க்காருக்கு துப்பில்லை" என்று தஞ்சை திலகர் திடலில், 16-10-58ல் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் கம்யூனிஸ்ட் தலைவர் ஏ. கே. கோபாலன் எம். பி. பேசினர். கூட்டத்துக்கு நகர கம்யூனிஸ்ட் தலைவர், எம். எஸ். கணபதி தலைமை தாங்கினர்.

ஏ. கே. ஜி. மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

### தேர்தல் கால வேட்டுகள்

"முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி, அணைகளையும் வாய்க்கால்களையும் கட்டி முடித்ததால், விவசாயம் செழித்து இந்திய நாட்டின் உணவுத் தேவை பூர்த்தியாகி விட்டதாகவும், உபரிகூட ஏற்பட்டுவிட்டதாகவும், ஆகவே, இனிமேல் உணவு இறக்குமதிக்காக ஒரு காசுகூட செலவழிக்க மாட்டோம் என்றும் பிரதமர் நேரு கூறினர்; இதர மத்திய மந்திரிகளும் கூறினர்கள்; தேர்தலும் அவ்வாறே கூறினர்.

அதுமட்டுமல்ல. முதல் திட்டத்தில் சாப்பாட்டுக்கு வழி செய்துவிடு, இரண்டாவது திட்டத்தில் தொழில் வளர்ச்சிக்கு திட்டமிட்டிருக்கிறோம் என்றனர்.

முதல் திட்டம் முடிந்தது. பஞ்சம் போயிற்று! நூற்றுக்கணக்கான கோடி ரூபாய்கள் உணவுப் பொருள் இறக்குமதிக்காகச் செலவழிக்கிறார்கள்.

### வட்டிக்கே போய்விடும்

இரண்டாவது திட்டத்தின் மத்தியில் அமெரிக்கா, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியங்களிலிருந்து அதிக வட்டிக்கும், சுதந்திரத்தை அடகு வைக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டு கடன் வாங்குகிறார்கள். இரண்டாவது திட்ட முடிவில் 100 கோடி ரூபாய் திருப்பிக்கொடுக்க நேரிடும். கடனைத் திருப்பிக்கொடுக்க முடியாத நிலையில் இருக்கமாட்டோம். கோடிப்பணத்தையும் வட்டிக்கே சரியாகிவிடும். இதனால் 3-வது திட்டம் இல்லாமலேயே போய்விடுமோ என்ற சந்தேகமும் ஏற்பட்டுவிட்டது.

### வேலையில்லாப் பட்டாளம்

2-வது திட்டத்தில் கனரகத் தொழில்களை வளர்க்கப் போவதாகவும், இதன் மூலம்தான் தேசிய வருமானத்தைப் பெருக்க முடியுமென்றும் சொன்னர்கள். ஆனால், அமெரிக்க பெருமுதலாளிகளிடம் கடன் வாங்கும்போது பெருந் தொழில்களைக் கைவிடவேண்டுமென்ற நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். வேலையில்லாத் திண்டாட்டத்தை போக்கப் போவதாகவும் சொன்னர்கள். ஆனால் இன்று மேல் கொண்டும் 20 லக்ஷம் பேர் வேலையின்றி வாடுகிறார்கள்.

### 11 கோடி ஏக்கர் தரிசு

நமது நாட்டில் 11 கோடி ஏக்கர்பூமி கரம்பை நிலமாகக் கிடக்கிறது. நிலம் சாகுபடி செய்யப்படாததால் கிராம மக்கள் வேலையின்றி சோம்பேறிகளாக அவதிப்படுகின்றனர். தரிசு நிலங்களை விவசாயிகளுக்குப் பங்கிட்டுத் தரவேண்டும். நிலத்தைவிட்டு யாரையும் வெளியேற்ற அனுமதிக்கக் கூடாது. நிலவுடைமைக்கும் வரம்பு கட்ட வேண்டும்" என்றார்.

மற்றும், கேரளசாதனைகள், எதிர்ப்பின் சுயரூபம் ஆகியவை பற்றியும் ஏ. கே. கோபாலன் பேசினர்.

# செஞ்சி தாலுக்காவை பஞ்சப் பிரதேசமாக அறிவிக்கவும்

## விவசாய சங்கம் கோரிக்கை

திண்டிவனம், அக். 15—

செஞ்சித் தாலுகா சத்தியமங்கலம் கிராமத்தில் விவசாய சங்கத்தின் சார்பில் நடைபெற்ற பொதுக் கூட்டத்துக்கு எஸ். கண்ணுச்சாமி தலைமை வகித்தார். பெரியதம்பி தெ. ஆ ஜில்லா விவசாய சங்கச் செயலாளர்; எஸ். நடராஜன், ஆர். முருகேசன், எஸ். ஏ. அந்தோணிசாமி ஆகியோர் பேசினர்.

செஞ்சி தாலுகாவை பஞ்சப் பிரதேசமாக அறிவித்து உதவி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்றும் அரிஜனங்களுக்கு 50 வீடுகள் கொண்ட காலனி அமைத்துத்தரவேண்டுமென்றும் மாட்டுத் தீவனத்தை அரசாங்கம் மலிவு விலைக்குத் தர வேண்டுமெனவும் வற்புறுத்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இரவு 'நாடகமல்ல' என்ற விவசாயிகள் வாழ்வை விளக்கும் ஓரங்க நாடகம் நடைபெற்றது. விவசாய மக்கள் இதைப்பெரிதும் பாராட்டினர்.

## விருதுநகர் கல்லூரி மாணவரிடையே

### கே. டி. கே. தங்கமணி

விருதுநகர், அக். 18—

14-10-58 அன்று விருதுநகர் செந்திக்குமார் நாடார் கல்லூரி சரித்திரப் பொருளாதார மாணவர் சங்கத்தின் சார்பில் நடந்த கூட்டத்தில் கே. டி. கே. தங்கமணி (எம் பி) பேசினர்.

### தபால்-தந்தி ஊழியர் கூட்டம்

அன்று இரவு விருதுநகர் தபால் தந்தி ஊழியர் கூட்டத்தில் தங்கமணி பேசினர்.

### ரயில்வே தொழிலாளர் கூட்டம்

இரவு 8 மணிக்கு விருதுநகர் ரயில்வே, மோட்டார் தொழிலாளர் சங்கக்கூட்டம் ராமன் தலைமையில் நடைபெற்றது.

மதுரை கணேசனின் 4½ வயது மகள் சௌபாக்கியம் மேதினத்தைப்பற்றியும் அரசியல் தலைவர்களைப்பற்றியும் பொது மக்களின் கேள்விகளுக்குச் சரியான பதிலளித்து எல்லோரையும் ஆச்சரியத்தில் மூழ்கடித்தாள்.

அமரர் சங்கரலிங்கனர் இரண்டாவது நினைவுநாள்பற்றி பரிபேக் மாரியப்பா பேசினர். எஸ். உலகநாதன், கிருஷ்ணன் ஆகியோர் ரயில்வே தொழிலாளர் போராட்டம்பற்றிப் பேசினர்.

இறுதியில் தங்கமணி பேசுகையில், மக்கள் சபை நடவடிக்கைகள், நாட்டில் தொழிலாளர் நிலை, கேரள அரசாங்கத்தின் சாதனைகள், பாகிஸ்தானில் ராணுவ ஆட்சி ஆகிய விஷயங்கள் பற்றிக் குறிப்பிட்டார்.

## மதுரையில் புதிய மருத்துவமனை திறப்புவிழா

மதுரை, அக். 11—

இன்று மதுரை அரசினர் மருத்துவ விடுதியின் அருகில் புதிய மருத்துவமனை ஒன்று கட்டி முடிக்கப்பெற்றது. இது வெளியில் தங்கள் வீட்டிலிருந்து கொண்டே வைத்திய வசதிபெறுபவர்களுக்கு மட்டும் பயன்படுமாம். அதிகமான செலவில் சுமார் 12 லட்சம் ரூபாயில் கட்டிமுடிக்கப்பெற்றது. இன்றுமாலை 4 மணியளவில் சென்னை மாநில முதன் மந்திரி திரு. காமராசு திறந்து வைத்தார். கட்டிடத் திறப்பு விழாவிற்கு நிலவரி, சுகாதார அமைச்சர் திரு. மாணிக்கவேலர் தலைமைவகித்தார்.

## ராயம்பாளையம் விவசாய சங்கம்

அவிநாசி, அக். 16—

ராயம்பாளையம் விவசாய சங்க அமைப்புக் கூட்டம் 5-10-58 அன்று நடைபெற்றது. ஐ. எம். ஷரீப் பேசினர்.

சங்கத்தின் தலைவராக சென்னிமலைக் கவுண்டரும் உபதலைவராக முத்துச்சாமியும் காரியதரிசியாக கருப்பசாமியும் உதவிக் காரியதரிசியாக ஆர். எம். ஆறுமுகமும் பொருளாளராக வள்ளியப்பனும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

சென்ற வாரத்திய மார்க்கெட் விமர்சனம்

# மணிலா எண்ணெய் விலைகள் இறங்கிப் பின்னர் ஏற்றம்

## புழுங்கல் அரிசி ஏற்றம்

சென்னை, அக். 19—

சென்ற வாரம் மணிலாப் பயிறு விலைகள் அழுத்தமாகவே காணப்பட்டது. வார ஆரம்பத்தில் நாள் 1க்கு சுமார் 20 டன் வரை வந்தது. பின்னர் அடை மழையின் காரணமாக வரத்து குறைந்தது. வெளியூர் மார்க்கெட்டுகளிலும் சரக்கு வரத்து மிகவும் குறைவு. கோவை சரக்கு ரூ 194 ஆக உறுதியாகவே தீர்ந்தது. சேலம் 'பட்டாணி' பயிறு ரூ 185 ஆக கூறினர்கள். இந்த மழையினல் ஆந்திராவிலும் இந்த ராஜ்யத்திலும் மாரிகால பயிருக்கு ரொம்பவும் அனுகூலம் உண்டு. முந்தியதாக விதைக்கப்பட்ட "பட்டாணி" அறுவடை வட ஆற்காடு ஜில்லாவில் மழையினல் தாமதிக்கப்பட்டது.

சென்ற வாரத்தில் எண்ணெய் மார்க்கெட்டில் நிலையற்ற போக்காக காணப்பட்டது. கல்கத்தா வியாபாரிகள் தேவைக்காக கொஞ்சம் சரக்கு வாங்கினர்கள். எண்ணெய் விலைகள் முதலில் ரூ 362 ஆக ஆரம்பித்து மத்தியில் ரூ. 357 ஆக இறங்கி பின்னர் கடைசியில் ரூ. 364 ஆக ஏற்றம் காணப்பட்டது. மழையின் காரணமாக பயிறுவரத்து குறைந்ததாலும், பயிறு விலைகள் ஏற்றத்தாலும் மில்கள் சரிவரவேலை செய்ய முடியவில்லை. புது பட்டாணி சரக்குவரும்வரை மில்கள் சரிவர இயங்காது. ஆகவே எண்ணெய் விலைகள் இறங்காது என்ற நம்ப இடமிருக்கிறது.

மழையின் காரணமாக திரேஸ் மாலுவரத்து குறைவு. வியாபாரமும் சற்று குறைவாகக் காணப்பட்டது. ஏறுவிலைகளில் குறிப்பிடக்கூடிய மாறுதல் இல்லை. கன்றுதோல் வரத்து ரொம்பவும் குறைவு..கிடைக்கக்கூடியசரக்கை வியாபாரிகள் துரிதமாக வாங்கிக் கொண்டார்கள். ஏற்றுமதி பகுதிகளில் மட்டரகங்களுக்கே கேள்வி அதிகமாக இருந்தது. முந்திய வாரத்திலேயே மட்ட ஐந்தாந்தர சரக்குகளுக்கு பேரம் நடைபெற்றது.

திரேஸ் கன் ஏறுவில் சற்று கூடுதலாக விலையில் கேள்வி இருந்தது. திரேஸ் வெளுசெளு வரத்து சுமாராக இருந்தது. மார்க்கெட் ரகம் உறுதியாக இருந்தது. ஆனல் செளு விலை 19 நயாபைசா வரை குறைந்தது. லண்டன் ஏலத்தின் காரணமாக ஏற்றுமதி வியாபாரத்தில் ஊக்க மேற்படவில்லை,

லண்டன் ஏலத்தில் முதலில் வெகு குறைவாக எடுத்துக்கொள்ளப்பட்டன. ஏலத்திற்கு வந்த சுமார் நான்கு லட்சத்திற்கு மேற்பட்ட தோலில் 2,60,000 தோல் தான் விற்கப்பட்டது. விலையும் மூன்று பென்ஸ் முதல் ஒன்பது பென்ஸ்வரை குறைந்துள்ளது. இந்த விலைக் குறைவு சிலருக்கு ஓரளவு வியப்பைக் கொடுத்து இருக்கிறது. ஆனல் ஜெர்மன் வியாபாரிகள் ஏலத்திற்கு வரவில்லையாதலால் விலைக்குறைவு எதிர்பார்க்கக்கூடியதே.

ஆந்திரா சர்க்கார் மத்திய உணவு மந்திரியிடம் முறையிட்டதின் விளைவாக கட்டாய அரிசி கொள்முதல் நிறுத்தப்பட்டதால் மில்கள் வேலை செய்ய துவங்கி விட்டன. இன்னும் கிருஷ்ணு, கோதாவரி முதலிய இடங்களிலிருந்து அரிசி வாகன்கள் வரவில்லை. கூடிய சீக்கிரம் "பஸங்கி" புடமா முதலிய புழுங்கல் அரிசி வரும் வாரங்களில் வரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கிளாஸ் குறுவை புழுங்கலரிசி மூட்டை 1க்கு (156 ரா) ரூ. 43 ஆக நிலவரமிருக்கிறது. மற்றபடி புழுங்கலரிசி விலைகள் மூட்டை 1க்கு ரூ. 1 முதல் 2 வரை கூடி விட்டது. வடகிழக்கு பருவ மழை ஆரம்பித்தாலும் டெல்டா இல்லாத பிரதேசங்களில் நீர்ப்பாசன ஏரிகளில் தண்ணீர் நிரம்பி வருவதாலும் இவ்வருஷம் சம்பா நெல் வெள்ளாமை திருப்திகரமாக இருக்குமென்று நம்பப்படுகிறது.

இருப்பு குறைந்து வருவதாலும் வரத்து இல்லாததாலும் பருப்பு வகைகள் மூட்டை 1க்கு 5 முதல் 10 வரை விலை ஏற்றம் காணப்பட்டது. பொதுவாக இந்த வாரத்தில் மிளகாய் விலைகளும் பூண்டு விலைகளும் அதிகரித்துள்ளது. உள்ளூர், வெளியூர் கிராக்கியால் புது வெல்லம் மணங்கு 1க்கு 5ரூபாய் வரை விலை ஏற்றம்காணப்பட்டது.

# கேரள தொழில் மந்திரி வேண்டுகோள்

## மூணாறில் ருசிகர சம்பவம்

மூணாறு, அக். 18—

நேற்று (17-10-58) மூணாறு டவுனில் காங்கிரஸ்காரர்கள் பொய்ப்பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்கள். ஒலிபெருக்கி இணைக்கப்பட்ட, காங்கிரஸ் கொடி கட்டிய ஜீப்பிலிருந்து ஒரு நபர் பேசினர் செங்கொடி சங்கத்தை தாக்கியும், ஐ.என்.டி.யு.சி.யையும், காங்கிரஸ் கட்சியையும் வாழ்த்தியும் பேசினர். கடைசியில் கோஷம் போடச் சொல்லி, 'ஐ என்.டி.யு.சி.' என்றார். 'ஒழிக' என்றார்கள் தொழிலாளர்கள். இந்த ருசிகர சம்பவம் மூணாறு டவுனில் நேற்று காலை சுமார் 11 மணிக்கு நடந்தது.

### அமைதியாக இருங்கள்

தேவிகுளம் தோட்டத் தொழிலாளருக்கு கேரள தொழிலாளர் அமைச்சர் திரு. டி. வி. தாமஸ் அவர்கள் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். அதில் அவர் தோட்டத் தொழிலாளரின் பிரச்சினையைத் தீர்க்கவே, மூணாறுக்கு வந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார் அவர் தொழிலாளர் பிரதிநிதிகளையும், மானேஜ்மெண்டின் பிரதிநிதிகளையும் சந்தித்துப் பேசியதாகவும், மானேஜ்மெண்டுக்கு ஒரு யோசனை கூறியிருப்பதாகவும், அவர்கள் முடிவை சனிக்கிழமை தெரிவிப்பதாக அறிவித்திருப்பதாகவும், அவர் கூறியுள்ள முறையில் இரு சாராருக்கும் நன்மையுண்டு என்றும், அவ் வேண்டுகோளில் இருக்கிறது அதற்கிடையில் தொழிலாளரும் மானேஜ்மெண்டாரும் அமைதியாகவும், கண்யமாகவும் நடந்து கொள்ள வேண்டும் என்றும் அந்த வேண்டுகோள் கூறுகிறது. (ந. கி.)

# மக்கள் பணிபுரியும் ஊழியருக்கு சோஷலிஸ்ட் தலைவர்கள் அவமதிப்பு

## எஸ். எஸ். சுரபி (மணி) ராஜினமா

சென்னை, அக். 19—

சோஷலிஸ்ட் கட்சி உறுப்பினரும், பல போராட்டங்களில் தீவிரமாகக் கலந்து கொண்டவரும், எஸ். எஸ். சுரபி என்ற அரசியல் புனைபெயர் கொண்டவருமான திரு. மணி, கீழ்க்கண்ட காரணங்களால், சோஷலிஸ்ட் கட்சியிலிருந்து விலகிக் கொள்ளுவதாக கடிதம் எழுதியுள்ளார் :

### போராட்டம் நடத்தினேன்

"நான் சென்னை அயன்புரம் மார்க்கெட் பகுதியில் போராட்டம் நடத்தியிருக்கிறேன். அந்த மார்க்கெட்டின் கழிவு தண்ணீர் நடைபாதையில் வழிந்து மக்களின் போக்குவரத்துக்கு இடைஞ்சலாக இருந்தது. சுகாதார அதிகாரிகளுக்கு எத்தனையோ தடவை முறையிட்டும் பலனளிக்காமற் போகவே, அதிருப்தியைத் தெரிவிக்க சாக்கடை நீர்ப் பானைகளை நிர்வாக அதிகாரியின் வீட்டு முன்னால் உடைப்போமென்று பிரச்சாரம் செய்தோம். அதுமட்டுமல்ல, அதிகாரிகளின் அலுவலகத்தின் முன்னாலும் அந்தத் தண்ணீரைக் கொண்டுவந்து கொட்டுவோமென்றும் பிரச்சாரம் செய்தோம். அப்புறம் தான் அதிகாரிகள் அசைந்து கொடுத்து, கடமையைச் செய்தார்கள். இந்தப் போராட்டத்தை நான் முன்னின்று நடத்தி வெற்றி கண்டேன்.

### கழுத்தைப் பிடித்து தள்ளிய போதும்

மார்க்கெட் பகுதியில் சோஷலிஸ்ட் கட்சி கிளையைத் திறந்தோம். அலுவலகம் இருந்த வீட்டுச் சொந்தக்காரர் அவர் வீட்டில் குடியிருக்கும் ஒரு தொழிலாளிக்கு பல தொந்தரவுகள் கொடுத்து வந்தார். இதை நாங்கள் கண்டிக்கவே, அவருக்கு ஆத்திரமேற்பட்டு, சில குண்டர்களைக் கூட்டிக்கொண்டு வந்து, அலுவலகத்திலிருந்த என்னையும் இன்னொரு ஊழியரையும் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினர்கள். உள்ளே புகுந்து சாமான்களை சூறையாடினர்கள். இதைப்பற்றி நாங்கள் மேல் கமிட்டிக்கு உடனடியாகத் தெரியப்படுத்தியும் இதுவரை ஒரு நடவடிக்கையும் எடுக்காமல் தலைமை பீடம் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறது.

### என்னை அடித்தபோதும் கொடியை ஒடித்தபோதும்

கிளை அலுவலகத்தின் அருகில் நட்டிருந்த சோஷலிஸ்ட் கட்சி கொடிக் கம்பத்தை அந்த வீட்டுக்காரர் எட்டி உதைத்தார்; முறித்தார். நான் தடுத்தபோது அவரது குண்டர்களும் என்னைக் கீழே தள்ளி அடித்தார்கள். தலைமைபீடம் அதற்குக்கூட ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.

### தியாகிகளுக்கு கிடைத்த மரியாதை

அதுமட்டுமல்ல, சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஜெயம்மாவும் எம். என். ஜெயலட்சுமியும் கைக் குழந்தையுடன் ஆகஸ்டு போராட்டத்தில் ஒன்னரை மாதம் தண்டிக்கப்பட்டு வேலூர் சிறையிலடைக்கப்பட்டனர். ஆனல் சுதந்திர தினத்தில் விடுதலையாகி சென்னை வந்தார்கள். அப்போது இரவு 10-30 மணி. நானே கடும் சுரத்தால் படுத்த படுக்கையாக இருந்தேன். அவர்களை வீட்டுக்கு அழைத்துவர, சோஷலிஸ்ட் கட்சியினர் யாரும் முன் வரவில்லை. சாதாரண கடமையைக் கூட அவர்கள் செய்யவில்லை.

இவ்விதமாக, பொது ஜனப் பிரச்னைகளில் பங்குகொள்ளாமலும், பங்குகொள்ளும் ஊழியர்களை மதிக்காமலும் உதவாமலும் இருக்கிற ஒரு கட்சியால் மக்களுக்கு நன்மை உண்டா?

### முற்போக்கு அணியிலே

ஆகவே, உழைப்பாளிகளுக்காக உண்மையிலேயே பாடுபடும் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து, 21வது வட்டக் கிளையில் தீவிரமாக பணியாற்றி வருகிறேன்.

## அணைக்கரைப்பட்டியில் பொதுக்கூட்டம்

போடி, அக். 16—

போடி, அணைக்கரைப்பட்டியில் 24-9 58ல் எஸ். கே. ஆர். ராஜு தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. பி சர்க்கரைத் தேவர், பொன்னையா ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

கிராமத்துக்கு உடனடியாகப் பஞ்சாயத்து சபை அமைத்துக் கொடுக்கும்படியும் ஹரிஜனங்களுக்கு வீடுகட்டித் தருமாறும் ஊருக்குக் கீழ்ப்பக்கத்தில் ஒரு ரயில் நிலயம் அமைத்துக்கொடுக்கும்படியும் தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

பள்ளித் தலைமையாசிரியர் எம். வைரத்தேவர் குழந்தைகளுக்கு இனிப்புகள் வழங்கினர்.

## தொழிலதிபர் சேஷசாயி மரணம்

திருச்சி, அக். 19—

தென்னிந்தியாவின் பிரபல தொழிலதிபர் வி. சேஷசாயி இன்று மாலை இங்கு மரணமடைந்தார். இவர் நீண்டகாலமாகவே நோய்வாய்ப்பட்டிருந்தார். அவருக்கு வயது அறுபத்தொன்பது.

திருச்சி-ஸ்ரீரங்கம் எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பொரேஷனை இவர் ஆரம்பித்து நடத்தினர். அதுதான் பின்னர் தென் சென்னை எலெக்ட்ரிக் சப்ளை கார்ப்பொரேஷனக வளர்ந்தது. மேட்டூர் கெமிகல்ஸ்,பெர்டிலைசர்ஸ் அண்டு கெமிகல்ஸ் (திருவாங்கூர்) குண்டாரா அலுமினியம் இண்டஸ்ட்ரீஸ் ஆகிய தொழில் நிறுவனங்களுடன் இவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்.

# கம்யூனிஸ்ட் கட்சி கிளை மகாநாடுகள்

சென்னை, அக். 20—

சிதம்பரம் தாலுகா செங்கழுநீர் பள்ளம் கம்யூனிஸ்ட் கட்சி கிளை மகாநாடு கூட்டம் தோழர் சக்ரவர்த்தி தலைமையில் 15-10-58ல் நடைபெற்றது.

தோழர்கள் டி. எம். சோமசுந்தரம், டி. ஆர். விஸ்வநாதன் கட்சிக் கொள்கை, கட்சியின் வேலைமுறைபற்றிப் பேசியபின், கிளைக்கு கலியமூர்த்தி செயலாளராகவும், என். பொன்னுசாமி உதவி செயலாளராகவும், சக்ரவர்த்தி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### எடையார்

சிதம்பரம் தாலுகா எடையார் கிளை கட்சி மகாநாடு கூட்டம் அக். 15ல் தோழர் பண்டரிநாதன் தலைமையில் நடைபெற்றது.

தோழர் டி. எம் சோமசுந்தரம் அறிக்கை செய்தபின், கிளைக்குப் பண்டரிநாதன்செயலாளராகவும், கோவிந்தராஜன் உதவி செயலாளராகவும், கோபால கிருஷ்ணன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### காட்டு மன்னார்குடி

தோழர் நாராயணசாமி தலைமையில் 16-10-58ல் நடைபெற்ற கட்சிக்கிளை மகா நாட்டில் டி. எம். சோமசுந்தரம், டி. ஆர். விஸ்வநாதன் அறிக்கை செய்தபின், செல்வராஜ் கிளைக்கு செயலாளராகவும், குப்புசாமி உதவி செயலாளராகவும், பி. நாராயணசாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாலை நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பாலகிருஷ்ணன் தலைமையில் செல்வராஜ், குப்புசாமி, ராமநாதன், வீஸ்வநாதன், ராமசாமி, டி. எம். சோமசுந்தரம் இன்றைய அரசியல் நிலை குறித்துப் பேசினர்.

### துணிசிரமேடு

அக். 17ல் திருநாவுக்கரசு தலைமையில் இங்கு நடைபெற்ற கிளை மகாநாட்டில், டி. எம். சோமசுந்தரம் அறிக்கை செய்தபின், திருநாவுக்கரசு செயலாளராகவும், ஏ. முனுசாமி உதவி செயலாளராகவும், கோவிந்தராஜன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### இராஜபாளையம்

நகர கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை மகாநாடு, அக். 3, 4ல் தோழர்கள் எஸ். கே. பங்காரு, எஸ். பெரியசாமி, ச. மாதவன் குழுவின் தலைமையில் நடைபெற்றது. தோழர் ஏ. சீனிவாசன் செங்கொடியேற்றினர். தோழர் ஆர். எச். நாதன் மகாநாட்டை ஆரம்பித்துவைத்து கட்சியின் அரசியல் ஸ்தாபனக் கொள்கைகளை விளக்கினர்.

தோழர் அலக், நகரக் கமிட்டியின் வேலைகளைப் பற்றி அறிக்கை சமர்ப்பித்தார்.

தோழர் எம் வி. சுந்தரம் கட்சி அங்கத்தினர்களின் கடமைகளை சுட்டிக் காட்டினர்.

தோழர்கள் அலக், கே. கே. பெருமாள், ச. மாதவன் ஆகியோர் முறையே காரியதரிசி, உதவிக் காரியதரிசி, பொருளாளராகவும், 15 பேர் கொண்ட நிர்வாகக் குழுவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ரயில்வேத் தொழிலாளர் கோரிக்கைகளை ஆதரித்தும், காளீஸ்வரா மில்லை சர்க்காரே நடத்தக் கோரியும் இன்னும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப் பட்டன.

### வேட்டக்காரனிருப்பு

அக். 16ல் கிளை மகாசபைக் கூட்டம் தோழர் ஜி. கோவிந்தசாமி தலைமையில் நடைபெற்றது. தோழர் எம். கோதண்டராமன் ஆண்டறிக்கை வாசித்தார். தோழர் எம். கோதண்டராமன் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### கீவளூர்

கீவளூர் கிளை மகாசபை அக். 13 ல் தோழர் வி. பாலகிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றது. தோழர் ரா. மகாலிங்கம் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### தேவூர்

தேவூர் கிளை மகாசபைக் கூட்டம் கிள்ளுக்குடியில் அக். 14 ல் தோழர் ஜி. வீரபத்ரன் தலைமையில் நடைபெற்றது. தோழர் எம். காத்தமுத்து ஆண்டறிக்கை வாசித்தார். தோழர் ஜி பக்தவத்சலம் கட்சியின் அமிருதசரஸ் மகாநாட்டு தீர்மானங்களை விளக்கினர். தோழர் எம். காத்தமுத்து காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# ஐ.என்.டி.யு.சி.-முதலாளிகள் கூட்டுச் சதி!

## மூன்று துப்பாக்கிப் பிரயோகம் துரதிர்ஷ்டமானது

### பாலச்சந்திர மேனன் அறிக்கை

திருவனந்தபுரம், அக். 20— மூன்று அருகே தொழிலாளர்கள் மீது போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் நடைபெற்றது துரதிர்ஷ்ட வசமானதுஎன்று கேரள தொழிற்சங்க கவுன்சில் பொதுச் செயலாளரான பி. பாலச்சந்திரமேனன் இன்று தெரிவித்தார் இந்த சம்பவம் பற்றி விசாரணை நடத்தப்பட வேண்டும் என்றும் அவர் கோரினர். (பி. டி. ஐ)




### சென்னை 1

24—10—58

காலை முதல் ஒலிபரப்பு

7-00 துதிப் பாடல்கள்; 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் - வானிலை அறிவிப்பு; 7-15 தமிழில்செய்தி; 7-30 விராலிமலை ஏ. என். சிங்காரம் நாதஸ்வரம் 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

1-00 மாதர் நிகழ்ச்சி 1.30 கீதமஞ்சரி; 1-40 ஹிந்தியில் செய்தி; 1-50 கீதமாலிகா; 2-00 தமிழில் செய்தி; 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5.30 ஏ. சுப்ரமணியம் வீணை; 5-45 காந்தி சர்ச்சை; 6-00 பஜனை; 6-05 பிராந்தியச்செய்திகள்; 6-15 ஐக்ய நாடுகள் தினம் திரு. எம். பக்தவத்சலம்பேச்சு; 6.25 கிராம நிகழ்ச்சிகள்; 7-15 தமிழில்செய்தி; 7-30சென்னை2-ல் உள்ளபடி; 9-00 இசைத்தட்டுகள் 9-30 லலித சங்கீதம்; 9-50 ஐரோப்பிய சங்கீதம்; 10-30 ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

24—10—58

காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக்கதிர்; 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 கே. எஸ். விராலிமலை ஏ. என். சிங்காரம் நாதஸ்வரம்; 8-00 ஆங்கிலத்தில் செய்தி; 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

1-00 மெல்லிசை; 1-30 வீணை; 1-40 ஹிந்தியில் செய்தி; 1-50 குரல் இசை; 2-00 தமிழில் செய்தி; 2-10 திருவாரூர் எஸ். பாலசுப்ரமணியம் பாட்டு; 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5.45 காந்தி சர்ச்சை; 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள்; 6-15 ஐக்ய நாடுகள் தினம் பேச்சு; 6-25 கிராம நிகழ்ச்சிகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 என். வி. வராகஸ்வாமி கோட்டு வாத்யம்; 8-30 டெல்லி அஞ்சல்; 9-00 ஆங்கிலத்தில் செய்தி; 9-15 நாட்டுப்பாடல்கள்; 9-30 கவிதை விளக்கம்; 9-40 இடைவேளை; 9.45 சித்ரகானம்; 10-00 ஒலிபரப்பு முடிவு.

## மார்க்கெட் நிலவரம்

சென்னை, அக். 22—

| | | |
|---|---|---|
| சவரன் | ரூ. | 73- 8-0 |
| தங்கம் (ரெடி) | ரூ. | 112- 4-0 |
| மூசை தங்கம் | ரூ. | 110- 8-0 |
| வெள்ளி100தோ. எடை | | 192-0-0 |
| வெள்ளி 1 ரூ. எடை | | 1-15- 6 |

**மணிலா பயறு**

531 ராத்தல் கொண்ட பாரம் (விற்பனைவரி உட்பட) கோடை சரக்கு ரூ. 194.00

மாரி சரக்கு ரூ. 188-00

**மணிலா எண்ணெய்**

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி 3%FFA (மொத்த விலை)

| | |
|---|---|
| ரெடி | 365 00 |
| அக்டோபர் | 362-00 |
| நவம்பர் | 331-00 |
| டிசம்பர் | 313-00 |

**விளக்கெண்ணெய்**

(500 ரா. பாரம் 1-க்கு) மதராஸ் கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் 330-00

சேலம் "தாமரை அன்னம்" 27-00

**தேங்காய் எண்ணெய்**

(37½ ரா. டின் 1க்கு)

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 40-50 |
| அம்பு மார்க் | 39-50 |
| ராஜா | 39-75 |

**சர்க்கரை**

2 அந்தர் மூட்டை 1க்கு நெட் விலைகள்—உய்யூரு 106 00

சாமல்கோட்டை 106 25

ஜனசக்தி பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டவர்: எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர் ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே சென்னை 1
Janasakthi, Tamil Daily,
32, Broadway, Madras 1

## தொழிலாளர்களை காட்டிக் கொடுத்தனர்

## மூன்று நிலைபற்றி நேரில் போய்வந்த தோழர் ராமமூர்த்தி விளக்கம்



### ஐ.என்.டி.யு.சி. தொழிலாளர்களும் போராட்ட அணியில்

சென்னை, அக். 20—

அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசின் உபதலைவரான பி. ராமமூர்த்தி பின் கண்ட அறிக்கையைப் பத்திரிகைகளுக்கு விடுத்துள்ளார்:

"நான் மூணறுக்கு சென்று இப்போதுதான் திரும்பியுள்ளேன். கண்ணன் தேவன் தேயிலைத் தோட்டங்களில் தற்போது நடைபெற்றுவரும் வேலை நிறுத்தம் பற்றி தவருன, திரித்துக் கூறப்பட்ட செய்திகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன.

1957 வருட போனஸ் பிரச்னை நீண்ட காலமாகவே தீர்க்கப்படாமலிருக்கிறது. தேவிகுளம் உப தேர்தலின்போது நிர்வாகத்தார் தாங்களாகவே 4 சதவிகித போனஸ் அளித்தனர். கம்யூனிஸ்ட் சர்க்காரின் அனுமதியோடுதான் இவ்வளவு கொஞ்சமான போனஸ் அளிக்கப்பட்டிருக்கிறது என்று கம்யூனிஸ்ட் கட்சிக் கெதிராக பொய்ப் பிரச்சாரம் செய்வதில் காங்கிரஸ்காரர்கள் இறங்கினர்.

அப்போது இந்தப் பிரச்னையை முக்கூட்டு மகாநாட்டு மூலம் தீர்க்க எடுத்துக்கொண்ட முயற்சிகள் தோல்வி அடைந்தன. ஏனென்ருல் தேர்தல் முடியும் வரை இந்தப் பிரச்னைப்பற்றி எதுவும் பேச முடியாது என்று நிர்வாகமும், ஐ. என். டி. யு. சி. சங்கமும் தெரிவித்தன.

**நிர்வாகத்தின் அடம்**

தேர்தல் முடிந்த பிறகு மீண்டும் இந்தப் பிரச்னை வந்தது. ஆனால் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கையை ஏற்க மறுத்து நிர்வாகம் அடம் செய்தது.

**ஐ. என். டி. யு. சி. யின் போக்கு**

இங்கிலையில்தான் ஏ. ஐ. டி. யு. சி.யும், ஐ. என். டி. யு. சி.யும் வேலைநிறுத்த நோட்டீஸ்கள் கொடுத்தன. இந்த மாதம் 13-ம் தேதி முதல் வேலைநிறுத்தம் செய்வது என்று ஏ. ஐ. டி. யு. சி. முடிவு செய்தது. நிர்வாகத்தோடு ஒன்ருக சேர்ந்து பேச்சுவார்த்தை நடத்த ஒரு கூட்டுக் கமிட்டி அமைக்கலாம் என்று ஏ. ஐ. டி. யு. சி. யோசனை கூறிற்று. ஆனால் ஐ. என். டி. யு. சி. இதை ஏற்க மறுத்து விட்டது

இது மட்டுமின்றி இரண்டு சங்கங்களையும் சேர்ந்த தொழிலாளர்கள் ஒரே நேரத்தில் வேலை நிறுத்தம் செய்வதற்காக வேலை நிறுத்தத் தேதியை அக்டோபர் 1 லிருந்து 7-ம் தேதிக்கு மாற்றும்படியும் ஏ. ஐ. டி. யு. சி. கேட்டுக் கொண்டது. ஐ. என். டி. யு. சி. தலைமை இந்த வேண்டுகோளையும் நிராகரித்து விட்டது.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஐ.என். டி. யு. சி. மட்டும் வேலை நிறுத்தத்தில் இறங்கி, ஏ. ஐ. டி. யு. சி. ஈடுபடாமலிருந்தால் அவ்வளவு நன்ருக இராது. ஆகவே தொழிலாளர்களது ஒற்றுமையைக்கருதியும், அவர்களிடையே விரோதமும் குரோதமும் ஏற்படக் கூடாது என்பதற்காகவும் ஏ. ஐ டி.யு.சி.யும் 4-ம் தேதியே வேலை நிறுத்தத்தில் இறங்கிற்று.

ஆனால் ஐ.என்.டி.யு.சி. 4-ம் தேதி அன்றே நிர்வாகத்தோடு ஒரு உடன்பாடு செய்துகொண்டது. அவரது இந்தப் பிரச்னையை மத்தியஸ்தத்துக்கு விடவேண்டுமென்று கூட்டாகச்சேர ஒப்புக் கொள்ளப்பட்டது.

**ஏன் எதிர்த்தோம்**

இந்த உடன்பாட்டை ஏ.ஐ.டி. யு.சி. எதிர்த்ததற்குக் காரணமுண்டு. அதாவது கடந்த காலத்தில் பல தோட்டத் தொழில் தகராறுகள் மத்தியஸ்தத்துக்குவிடப்பட்டு, மிகுந்த காலதாமதம் ஏற்பட்டது அனைவருக்கும் தெரியும். உதாரணமாக சென்னையில் 1952-ல் ஒரு தொழில் தகராறு தொழில் நீதி மன்றத்துக்கு விடப்பட்டு அது இன்னும் முடிவடையாமல் சுப்ரீம் கோர்ட்டில் இருக்கிறது.

இதனால்தான் இப்போதைய போனஸ் பிரச்சினையை மத்தியஸ்தத்துக்கு விடாமல் உடனடியாக ஏதாவது ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமென்று ஏ.ஐ டி.யு.சி ஆவல்கொண்டது. மத்தியஸ்தத்துக்கு விடுவதால் எவ்வளவு காலதாமதம் ஏற்படுகிறது என்பதை சென்னையிலும், கேரளாவிலும் அனுபவப் பூர்வமாக அறிந்திருந்தும் ஐ.என். டி.யு.சி. தலைவர்கள் இதற்கு சம்மதித்தது ஆச்சரியமாக இருக்கிறது. இதைப் பார்க்கும்போது தொழிலாளர்களது நலனுக்காக அல்லாமல் ஏதோ ஒரு அரசியல் நோக்கத்துக்காகவே இதை ஐ. என். டி. யு. சி. தலைமை செய்திருக்கிறது என்பது தெளிவாகிறது.

கேரள சர்க்கார் சட்ட பூர்வமாகத் தனதுகடமையைச் செய்யவில்லை என்பதே ராமனுஜத்தின் புகார். ஒரு தொழில் தகராறில் மத்தியஸ்தம் கோரி ஒரு தொழிற் சங்கமும் தொழில் நிர்வாகமும் கூட்டாகக் கேட்கும்பொழுது சர்க்கார் நிச்சயம் அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியதே, ஆனால் இக்கோரிக்கை வைக்கும் தொழிற்சங்கம் பெரும்பாலான தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப் படுத்துவது என்று சர்க்காருக்குத் திருப்திகரமான தகவல் தேவை. ஐ.என்.டி யு.சி. சங்கத்தில் மெஜாரிடியான தொழிலாளர் இருப்பதாக ராமானுஜம் உரிமை பாராட்டலாம். ஆனால் புள்ளி விபரங்கள் இதை ஊர்ஜிதம் செய்யா. உப தேர்தலின்போது இவ்வாறு ஜம்பம் பேசினர்கள். உபதேர்தல் முடிவு அவர்கள் கூற்றைப்பொய்ப்பித்து விட்டது. தீர்மானமாக தொழிலாளர் முடிவு தெளிவாகத் தெரிவிக்கப்பட்டும் மீண்டும் இவ்வாறு கூறுவது விந்தையே.

**படுகேவலம்**

தோட்ட நிர்வாகங்களின் போக்கு மிகவும்கேவலமாக இருக்கிறது. ஒரு சங்கத்துடன் மட்டும் தாமாகத் தனியாக உடன்பாடு செய்துகொள்ள அவர்களுக்கு உரிமை கிடையாது. ஐ என்.டி.யு. சி.க்கு பலமில்லை என்பதைப் பின் நிகழ்ந்த சம்பவங்கள் தெளிவாக்கி விட்டன.

போலீஸ் உதவியுடன் ஐ. என். டி.யு.சி. தலைவர்கள் தொழிலாளர்களை வேலைக்குத் திரும்புமாறு கேட்டும் பயனில்லாது போகவே இப்போது மற்ற தொழிலாளர்கள் பயமுறுத்துவதாகப் புரளி செய்கிருர்கள். ஐ. என். டி. யு. சி. தொழிலாளர் பலர் மீது இந்தப் பழி சுமத்தப்படுகிறது.

மிகப் பல தோட்டங்களில் ஐ. என். டி. யு. சி. கமிட்டிகளே தேசியக் கொடிகளுடன் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த முன் வந்துள்ளன. தலைமைக்கு தொழிலாளர் ஆதரவு இல்லை என்பதே இதில் வெளிச்சமாகிறது.

**அரசியல் போர்**

ஐ. என். டி. யு சி. தோட்ட நிர்வாகங்கள் இவற்றின் போக்கிலிருந்து இவர்கள் ஓர் அரசியல் போராட்டத்தைத்தான் நடத்தி வருகிருர்கள் என்பது நன்கு தெரிகிறது. வேலை நிறுத்தத்தால் தேயிலைத் தொழிலில் பெரு நஷ்டம் ஏற்படுவதாக முதலாளிகள் கூக்குரலிடுகின்றனர். இது உண்மையானல் சர்க்கார் சமரச முயற்சிகளை ஏற்றிருக்கலாமே. இவர்கள் நஷ்டமேற்படுவதாகக் கூறும் தொகையைவிடப் போனஸ் கொடுப்பதால் ஏற்படும் செலவு குறைவே. அரசியல் போராட்டமாக நடத்தவே அவர்கள் ஐ. என். டி. யூ. சியுடன் கூட்டுச் சேர்ந்துள்ளனர். காசு கொடுத்து விளம்பரம் செய்து கேரள நிலச்சீர்திருத்த மசோதாவைக் கண்டிக்கிருர்கள். தோட்டங்கள் இந்த மசோதாவின் கீழ்வராது என்று திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளது. அப்படியிருக்க இவர்கள் எதிர்ப்பது அரசியல் உள் நோக்கத்தையே காட்டுகிறது. தொழிலாளர் கோரிக்கைகளையும், கேரள சர்க்கார் சமரச முயற்சியையும் இந்த அரசியல் நோக்குடன்தான் இவர்கள் பார்க்கின்றனர் என்பதும் வெள்ளிடைமலை என்று அவர் அறிக்கையில் கூறுகிருர்.

## 4 பிரெஞ்சு சிப்பாய்கள் விடுதலை

### அல்ஜீரிய சர்க்காரின் நல்லெண்ண சமிக்ஞை

டுனிஷ், அக். 20—

சென்ற ஜனவரியில் அல்ஜீரிய விடுதலை வீரர்களால் கைது செய்யப்பட்ட 4 பிரெஞ்சு சிப்பாய்கள் இன்று விடுதலை செய்யப்பட்டனர்.

## சைப்பிரஸில் இரு போலீஸ்காரர் சுடப்பட்டு மாண்டனர்

நிகோசியா, அக். 20—

இன்று மேற்கு சைப்பிரஸில் பிரிட்டிஷ் சுரங்கங்கள் அருகில் காவல் புரிந்த இரு போலீஸ்காரர்கள் சுடப்பட்டு மாண்டனர்.

## அமெரிக்க எண்ணெய்க் கப்பல் வெடித்தது

பம்பாய், அக். 20—

இன்று அரபுக் கடலில் அமெரிக்க எண்ணெய்க் கப்பல் ஒன்று வெடித்ததன் விளைவாக, 16 சிப்பந்திகள் மாண்டனர்; மற்றும் நான்குபேர் காணமற் போயினர். அவர்களும் மாண்டேயிருப்பர்.

அக்கப்பல் சனிக்கிழமை இரவு பம்பாயிலிருந்து புறப்பட்டது. பம்பாய்க்கு வடமேற்கே 520 மைல் தொலைவில் கப்பல் சென்றதும் வெடி விபத்து ஏற்பட்டது.

## மாஸ்கோவில் அரேபியக் குடியரசு அமைச்சர்

மாஸ்கோ, அக். 20—

ஐக்கிய அரேபியக் குடியரசின் தற்காப்பு அமைச்சரான மார்ஷல் அப்துல் ஹக்கீம் அமர் நேற்று மாஸ்கோ வந்து சேர்ந்தார். இன்று கிரம்ளின் மாளிகைக்கு சென்று, சோவியத் முதல் உதவி பிரதமரான புரோல் கோஸ்லோவோடு சிநேகபூர்வமான பேச்சு வார்த்தைகள் நடத்தினர். பின்னர் சோவியத் தற்காப்பு அமைச்சர் மார்ஷல் மாலினோவ்ஸ்கியையும் சந்தித்துப் பேசினர்.

## மீண்டும் ஜெயப்பிரகாஷ் நேரு சந்திப்பு

புதுடெல்லி, அக். 20—

சர்வோதயா தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் இன்று பிரதமர் நேருவைச் சந்தித்து 90நிமிடநேரம்பேசிக்கொண்டிருந்தார். இந்தப் பேச்சு வார்த்தை விவரங்களை கூற அவர் மறுத்து விட்டார். சமயம் வரும்போது தெரிவிப்பதாகக் கூறினர். நேருவை சந்திப்பது இது இரண்டாவது தடவையாகும். ஏற்கனவே நேற்று ஒரு முறை அவர் நேருவைச் சந்தித்தார்.

## 500 கைக்கடிகாரங்கள் பறிமுதல்

### ஹாங்காங்கிலிருந்து வந்த விமானத்தில் அகப்பட்டன

பம்பாய், அக். 20—

ஹாங்காங்கிலிருந்து வந்த விமானமொன்றில் 500 கைக் கடியாரங்களை இன்று சுங்க அதிகாரிகள் கைப்பற்றினர். அந்தக் கடிகாரங்களின் மதிப்பு ரூ. 25,000

ஒரு பையில் அந்தக் கடியாரங்கள் இருந்தன, கடியாரங்களுக்கு உரியவர் என்றுகூறி யாரும் முன் வரவில்லை.

## அமிர்தசரஸில் கடும்புயல்

### பயிர்களுக்கு நாசம் விளைந்தது

அமிர்தசரஸ், அக். 20—

நேற்றிரவு கடும்புயல் வீசியதால் அமிர்தசரஸும் பக்கத்து கிராமங்களும் பாதிக்கப்பட்டன. மின்சார சப்ளை அடியோடு நின்றதால் அமிர்தசரஸ் நகரை இருள் கவ்வியது. நகரில் டெலிபோன் போக்குவரத்தும் ஜல சப்ளையும் கூட தடைபட்டன. கணக்கற்ற மரங்கள் வீழ்ந்து, போக்குவரத்து தடைபட்டது. ஆலங்கட்டி மழையும் பெய்தது. நெல் முதலிய பயிர்கள் பெருஞ்சேத மடைந்தன.

## ஷேக் அப்துல்லா மீது வழக்கு விசாரணை

ஸ்ரீநகர், அக். 19—

காஷ்மீர், ராஜ்யத்திற்கு விரோதமான செயல்களில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டுள்ள ஷேக் அப்துல்லாவின் வழக்கு விசாரணை செய்யப்படும் என்று தெரிகிறது.

## போலீஸ் நிர்வாகம் பற்றி விசாரிக்க சர்வகட்சிக் குழு

பாட்ன, அக். 18—

பீஹார் ராஜ்யத்திலுள்ள போலீஸ் நிர்வாகத்தின் பல்வேறு அம்சங்களையும்பற்றி விசாரணை நடத்தி சிபார்சுகள் செய்ய ஒரு சர்வகட்சிக் குழுவை சர்க்கார் நியமனம் செய்துள்ளது

## நவம்பர் 1-ம் தேதி கேரள தினம்

### விமரிசையாகக் கொண்டாடும்படி கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல்

திருவனந்தபுரம், அக். 20—

நவம்பர் 1-ம் தேதி கேரள தினத்தை விமரிசையாகக் கொண்டாடும்படி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் கேரளராஜ்யக் கமிட்டி மக்களுக்கு அறைகூவல் விடுத்துள்ளது.

அன்று சிரமதானம் வழங்கி நீர்ப்பாசன வேலைகளிலோ அல்லது கலப்பு உரம் தயாரிப்பது போன்ற வேலைகளிலோ அல்லது உரத் தழை செடிகளை நடும் பணியிலோ ஈடுபடும்படி கம்யூனிஸ்ட் கட்சி கேட்டுக் கொண்டுள்ளது.

## ஜோர்டானிலிருந்து பிரிட்டிஷ் வெளியேற்றம் ஆரம்பம்

### முதல் பகுதி கப்பலேறிற்று

அம்மான், அக். 20—

ஏற்கனவே அறிவிக்கப்பட்ட வாபஸ் திட்டப்படி பிரிட்டிஷ் படைகளில் முதல் பகுதி இன்று செங்கடல் வளைகுடா துறைமுகமான அக்காபாவிலிருந்து கப்பலேறிற்று.

இன்று முதல் ஒரு வாரம்வரை தினசரி கப்பல்கள் மூலம் பிரிட்டிஷ் படைகள் வெளியேறும் என்று ஒரு ராணுவ அதிகாரி கூறினர். இந்த படைகள் சைப்பிரசுக்குச் செல்லும்.

இதே நேரம் 16-வது பிரிட்டிஷ் பாராசூட் படைகளைவிமான மூலம்அனுப்புவதற்காக அம்மான் விமான தளத்தில் ஏற்பாடு நடக்கிறது. இந்த விமானங்கள் சிரியா, லெபனன் வழியாகச் செல்லும்.

## எழுத்தாளருக்கு அதிக உரிமைகள்

### புது சர்வதேச உடன்பாடு

புதுடில்லி, அக். 20—

இலக்கியம், நுண் கலை பாதுகாப்பு குறித்து புதிய சர்வதேச சம்பிரதாயம் நாளை முதல் இந்தியாவில் அமலுக்கு வருகிறது. இந்த உடன்பாடு, எழுத்தாளருக்கும் கலைஞர்களுக்கும் முன்னிருந்ததைவிட அதிக உரிமைகளை வழங்குகிறது.

முதன் முறையாக இந்த உடன்பாட்டின் பிரகாரம் இந்தியாவுக்கும் பிலிப்பைன், துருக்கி இந்நாடுகளுக்கும் காப்பிரைட் துறையில் உறவு ஏற்படுகிறது.

## கேரள சட்ட அமைச்சர் இ. எம். எஸ். சந்திப்பு

கோட்டயம், அக். 21—

மூணறு தோட்டப்பகுதிகளில் உள்ள நிலைமையை நேரில் அறிந்து வந்த கேரள சட்ட இலாகா அமைச்சர் வி. ஆர். கிருஷ்ண ஐயர் இன்று, இங்கு கேரள முதலமைச்சர் இ எம். எஸ். நம்பூதிரிபாட்டைச் சந்தித்து தோட்டத் தொழிலாளர் நிலைமை குறித்துப் பேச்சுவார்த்தைகள் நடத்தினர்.

"இன்று காலை, சட்ட இலாகா அமைச்சர், மூணறு பகுதியிலுள்ள எஸ்டேட்டுகளையும் நேற்று போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் நடைபெற்ற குட்ராலி எஸ்டேட்டையும் சுற்றிப் பார்த்தார். போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல், ஜில்லா போலீஸ் அதிகாரி, கோட்டயம் ஜில்லா கலெக்டர், தொழிலாளர், மானேஜ்மெண்டார் பிரதிநிதிகள் ஆகியோரையும் சந்தித்து நிலைமைகளைப் பற்றி விவாதித்திருக்கிருர். கண்ணன் தேவன் எஸ்டேஸ் அலுவலகத்தின் முன் உண்ணுவிரதமிருக்கும் செல்லையாவுடனும் சட்ட அமைச்சர் கலந்து பேசினர் என்று தெரிகிறது

## தாய்லந்து சர்க்காரை ராணுவம் கைப்பற்றியது

பாங்காக், அக். 20—

இன்று தாய்லந்தின் சேனதிபதி சர்க்காரைக் கைப்பற்றினர். பிரதம மந்திரியும் இதர மந்திரிகளும் ராஜினாமா செய்தனர். இனி ராணுவ ஆட்சி ஏற்பட்டு விட்டது.

தாய்லந்து அமெரிக்க சார்பு நாடு என்பது குறிப்பிடத்தக்கது.

## உஜ்ஜெய்னியில் புத்தர் கால நாகரிகச் சின்னங்கள்



சமீபத்தில் உஜ்ஜெய்னியில் கார் குன்றுப் பகுதியில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சி நடவடிக்கைகளிலிருந்து, அப் பிரதேசத்தில் கி. மு. 500-வது வருஷத்திலிருந்து மாள்வாவில் முகமதியர் ஆட்சி தோன்றிய காலம் வரை வெவ்வேறு வகையான நான்கு வகைப் புராதன நாகரிகங்கள் இருந்து வந்திருப்பதாகத் தெரிய வருகிறது. அந்தக் காலத்தில் நன்கு அமைக்கப்பட்டிருந்த கோட்டைச் சுவர்கள், ரஸ்தாக்கள், அவசர உபயோகத்துக்காகச் செங்கல்லால் கட்டப்பட்ட குளம் முதலியவை அங்கே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

அவ்வாராய்ச்சிகள் நடத்தப்பட்ட பகுதிகளின் சில தோற்றங்களைப் படத்தில் காணலாம்.

## ஏகாதிபத்தியத்தை எதிர்த்த வீரர்களில் ஒருவன் கட்டபொம்மன்

### சென்னை விழாவில் தலைவர்கள் பேச்சு

சென்னை, அக் 20—

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து விடுதலைப்போர் நடத்திய பாஞ்சாலங்குறிச்சி மன்னன் வீரபாண்டியக் கட்டபொம்மன் உயிர்த் தியாகம் புரிந்த நினைவு நாள் ஜனவரி 19ம் தேதி சென்னை நகரில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தமிழரசுக் கழக சார்பில் அமைக்கப்பட்ட கட்டபொம்மன் விழாக் குழுவினர் வெகு சிறப்பான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

மாலை 6 மணிக்கு சென்னை திருவல்லிக்கேணி கடற்கரை திலகர் கட்டத்தில் பிரம்மாண்டமான தோர் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

மண்டபம் போன்று அமைக்கப்பட்ட பெரிய மேடைமீது குதிரைமீது அமர்ந்த கோலத்தில் கட்டபொம்மன் உருவம் காட்சியளித்தது.

துவக்கத்தில் கலைஞர் டி. கே. ஷண்முகம், நாமக்கல் கவிஞர், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை ஆகியவர்கள் கட்டபொம்மன் மீது இயற்றிய பாடல்களை வெகு உணர்ச்சியோடு பாடினர்.

பின்னர் விழாக்குழுவின் தலைவர் வழக்கறிஞர் பட்சிராஜ கோபாலன் வந்திருந்த அனைவரையும் வரவேற்றுப் பேசினர்.

**ம. பொ. சி.**

கூட்டத்துக்குத் தலைமை வகித்த திரு. ம. பொ. சிவஞானம் பேசுகையில் கூறியதாவது:

"...1799-ம் ஆண்டு அக்டோபர் 16-ம் நாள் வீரபாண்டியக் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட நாளாகும். பாஞ்சாலங்குறிச்சி மன்னன் பாதையோரத்தில் வளர்ந்திருந்த ஒரு புளிய மரத்தில் மிகப் பரிதாபகரமாக தூக்கிலிடப்பட்டான்.

"நாடோடிகளாக தமிழகத்தில் புகுந்து வாணிபத்தின் பெயரால் நம் நாட்டின் வளத்தைக் கொள்ளையடித்த பரங்கியர் கூட்டம் கட்டபொம்மனைத் தூக்கிலிட்டது பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கப்பம் கட்ட மறுத்த காரணத்துக்காகவே கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்டான். ஆம், தேச பக்தி காரணமாக அன்னியனுக்கு அடங்கி வாழ மறுத்தான். அதை குற்றமெனக் கூறி கட்டபொம்மனுக்கு மரண தண்டனை விதித்தது பிரிட்டிஷ் ராணுவ கோர்ட். தூக்கிலிட்ட வெள்ளையத் தளபதி பானர்மென்னும், உயர்த்திப் போற்றும் வகையில் வீர மரணம் எய்தினன் கட்டபொம்மன். அந்த மாவீரனுக்கு, விடுதலைப் போரின் வித்தூன்றியவனுக்கு நமது வணக்கத்தைச் செலுத்துவதற்கே இந்த விழா.

"...கட்டபொம்மனுக்கு விழா நடத்துவதில் மக்கள் அடையும் பயன் என்ன? என்று கேட்கப்படுகிறது இழந்த சுதந்திரத்தை தேச பக்தியை வளர்த்ததன் மூலமே திரும்பப் பெற்ருேம். இப்போது பெற்றுள்ள சுதந்திரத்தை திரும்பவும் இழந்து விடாமல் இருக்கவேண்டுமானல், 'தேசபக்தி' என்ற பண்பாட்டை வளர்க்கவேண்டும். அதற்காகவே கட்டபொம்மன் போன்ற தேச பக்த வீரர்களுக்கு, விழா நடத்துகின்றது தமிழரசுக் கழகம்.

வீரபாண்டியன் தமிழன் என்பதற்காகவும் விழா நடத்துகின்ருேம். ஆனால் அது இரண்டாம் பட்சம்தான். முதலில் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து சுதந்திரத்திற்காகப் போராடியவன் என்பதற்காகவே அவனைப் போற்றுகிருேம்

"அவனுக்கு மட்டுமல்லாமல் அவன் நடத்திய போரில் தலை கொடுத்த தானபதிப்பிள்ளை, ஊமைத்துரை, தளவாய் வேலுத் தம்பி, திப்புசுல்தான் ஆகிய சுதந்திர வீரர்களையும் வணங்குகிருேம்.

முகலாயர் ஆட்சிக் காலத்தில் ஆற்காட்டு நவாபுக்குத்துணையாக இருந்த கிழக்கிந்தியக் கம்பெனியை எதிர்த்துப் போராடிய நெற்கட்டுச் செவ்வப் பாளையக்காரரும் நமது பாராட்டுதலுக்குரியவர்தான் என்ருர்.

**டாக்டர் மு. வ.**

டாக்டர் மு. வரதராசனர் கட்டபொம்மன் திருஉருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசியதாவது:

"நமது தமிழகத்தின் சரித்திரத்திலே எண்ணற்ற வீரர்களைக் காண்கிருேம். அவர்களிலே தனிச் சிறப்புக்கும் மக்கள் மரியாதைக்கும் உரியவன் கட்டபொம்மன். தமிழ் வீரத்துக்கு ராஜராஜ சோழன், ராஜேந்திர சோழன் போன்ற மன்னர்களைச் சொல்லலாம். ஆனல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத் எதிர்த்துப் போரிட தமிழகத்திலே ஒரு வீரன் தோன்றவில்லையா என்று கேட்டவர்களுக்கு, கட்டபொம்மனைச்சொல்லி நாம் கௌரவம் பெற முடிகிறது. அந்த வகையில் தமிழகத்தின் மானத்தைக் காத்த வீரன் கட்டபொம்மன்."

**பி. ராமமூர்த்தி**

திரு பி. ராமமூர்த்தி அவர்கள் பேசுகையில் கூறியதாவது:—

"பிரிட்டிஷ்காரன் இந்தியருக்கு வரலாறே கிடையாது என்று சாதித்தான். பின்னர் தேசபக்தர்கள் தங்கள் தாயகத்தின் வரலாற்றைப் போர்க்கருவியாகப் பயன்படுத்த முனைந்த போது பொய் வரலாற்றை சிருஷ்டிப்பதில் பிரிட்டிஷ்காரர்கள் முனைந்தனர். அந்தப் பொய்யர்களின் கூற்றுக்களையே நமது பள்ளிகளில் 'வரலாறு' என்ற பெயரில் படித்தோம். சுதந்திரத்திற்காகப் போராடியவர்களைக் கொள்ளைக்காரர்களாகவே கருதினர் அந்நாளில் வெள்ளையர்கள்.

ஆனல் கட்டபொம்மனைத் தூக்கிலிட்டதளபதிபானர்மென் அவ்வீரனைப்பற்றி அப்படிச் சொல்லவில்லை. "சுதந்திரத்தலைவனக விளங்குகிருன்! மற்ற பாளையக்காரர்களையும் தன்பக்கம் இழுக்க முயலுகிருன் என்பதற்காகவே கட்டபொம்மனைத் தண்டித்தேன். மற்ற பாளையக்காரர்களையும்பார்க்கும்படி செய்து கட்ட பொம்மனைத் தூக்கில்ஏற்றினேன்." இதையெல்லாம் கம்பெனித்தலைவருக்கு எழுதிய அறிக்கையில் பானர் மென் கூறுகிருன் என்ருர்.

"கட்டபொம்மனைத் தூக்கிலிடப்பட்டபிறகு, பிரிட்டிஷ் ஆட்சி இந்த நாட்டில் உறுதிப்பட்டு விட்டது. அதனல் திரும்பவும் சுதந்திரப்போர் தலை தூக்காமல் இருக்க கட்டபொம்மன் போன்றவர்களை கொள்ளைக்காரர்கள் என்று வர்ணித்து ஆங்கிலேயர் கதைகள் கட்டினர். கட்டபொம்மனை மக்கள் பின்பற்றிவிடக் கூடாது என்பதற்காகவே இந்தப் பொய்ப்பிரச்சாரம்" என்ருர்.

இந்தப் பொய்ப்பிரசாரத்தை நம்பி ஒருசாரார் கட்டபொம்மனுக்குஎதிரான சர்ச்சையை கிளப்பியிருக்கின்றனர் என்ருல் அவர்களைப் பற்றி என்ன நினைப்பது! அவர்களை எந்த ஆஸ்பத்திரிக்கு அனுப்புவது? கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரியில் இருப்பதற்குக் கூட அவர்களுக்குத் தகுதி கிடையாதே. பிரத்தியேக ஆஸ்பத்திரியல்லவா கட்டவேண்டும்!

"வீரபாண்டியன் நடத்தியப் போராட்டம் தோல்வியுற்ற பிறகு அதைவிட விரிந்த அளவு போராட்டம் பிற்காலத்தில் நடத்தப்பட்டது. அதில் வெற்றி கிடைத்து நாடு விடுதலை பெற்று விட்டது. ஆனல் அத்துடன் திருப்தியடைந்து விடுவதற்கில்லை பெற்ற சுதந்திரத்தைக் காப்பதற்கும் நாம் அக்கறை கொள்ள வேண்டும்.

"பிரிட்டிஷார் வியாபாரத்தின் பெயரால் இந்த நாட்டைச் சுரண்டுவதற்காக வந்தார்கள். அதை வெற்றிகரமாக நிறைவேற்றவே அரசியல் ஆதிக்கத்தையும் கைப்பற்றினர்கள். இன்னும் இந்தியாவுக்கு உதவிபுரிய, கடன் கொடுக்க, வெளியிலுள்ள சிலர் அக்கறை காட்டுகிருர்கள்.

நாம் எப்படியெல்லாம் நடந்து கொள்ளவேண்டும் என்று புத்திமதிகளும் கூற ஆரம்பித்திருக்கிருர்கள். இவர்கள் விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்."

பின்னர் திருமதி. எஸ். விஜயலட்சுமி, கலைஞர் ஏ. பி. நாகராஜன், எம்.ஏ. வேணு, எஸ்.கே. பாலசுப்பிரமணியம், சின்ன அண்ணமலை, ஜி. உமாபதி ஆகியோர் பேசினர்.

திரு. ஜி. முத்து நன்றி கூறினர்.

பொதுக்கூட்டத்திற்கு முன்பு, பிற்பகல் 3 மணிக்கு மேல் ராயபுரம் ராபின்சன் பார்க்கிலிருந்து ஒரு மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. வீரபாண்டிய கட்டபொம்மன் உருவச்சிலை புஷ்ப விமானத்தில் வைக்கப்பட்டு ஊர்வலத்தின் முன்னே கொண்டு செல்லப்பட்டது. பொய்க்கால் குதிரையாட்டம், மயிலாட்டம், சிலம்பு விளையாட்டுக்கள் ஊர்வலத்தில் நிகழ்ந்தன. அலங்கரிக்கப்பட்ட காரில் மா.பொ.சி., டி. கே. ஷண்முகம், ஏ.பி.நாகராஜன், சின்ன அண்ணமலை, ஆகியோர் அமர்ந்திருந்தனர். ஊர்வலம் ஜார்ஜ் டவுன், பார்க் டவுன், பெரியமெட், சிந்தாதிரிப்பேட்டை, ரவுண்டான வழியாக கடற்கரையை அடைந்தது.

## கோவா விடுதலை இயக்கத் தியாகி குன்ஹாவுக்கு வீரவணக்கம்

பம்பாய், அக். 18—

கோவா விடுதலை இயக்கத் தலைவர்களில் முன்னணியில் நின்று அண்மையில் காலமான விடுதலை இயக்கத் தியாகி டாக்டர் குன்ஹாவுக்கு அஞ்சலி செலுத்த விசேஷக்கூட்டம் நடைபெற்றது. பம்பாய் முதலமைச்சர் சாவன் தமது வணக்கத்தைத் தெரிவித்துச் செய்தி அனுப்பியிருந்தார்.

தலைமை வகித்துப்பேசிய டாக்டர் வயோலா, குன்ஹா கோவா மக்களையும் இந்தியாவில் இதர பகுதிகளிலுள்ள மக்களையும் விடுதலைப் போராட்டத்தில் ஒன்றுபட்டு நிற்கச் செய்தார் என்று குறிப்பிட்டார்.

டாக்டர் குன்ஹா 1927-ம் ஆண்டு தொட்டே ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்துபோராடி வந்தவர் என்று வழக்கறிஞர் லத்தீபி கூறினர்.

கம்யூனிஸ்ட் தலைவர் ஏ. எஸ். ஆர். சாரி பேசுகையில், 'குன்ஹாவின் தேசபக்திச் சுடர்' என்றும் அணையாது என்ருர்.

## இந்திய வியாபாரி கைது

டாக்கா, அக். 19—

அன்னியச் செலாவணியில் மோசடி செய்ததாக, இங்குள்ள ஒரு இந்திய வியாபாரியும், அவருடன் வர்த்தக உறவு பூண்ட மற்ருெருவரும் கைது செயயப்பட்டார்கள். இவர்கள் 5 லட்சம் ரூபாய் மதிப்புள்ள கருவாட்டையும் காய்கறிகளையும் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்தார்களாம்.

## புகளூர் சர்க்கரை ஆலை ஊழியர்கள் கூட்டம்

புகளூர், அக். 18—

தி டெக்கான் சுகர் அண்டு ஆப்காரி கம்பெனியின் ஆபீஸ் சிப்பந்திகள் கூட்டம் எஸ். எம் ராமசாமி தலைமையில் நடைபெற்றது.

சங்கத்தை ஒரு தொழிற்சங்கமாகப் பதிவுசெய்து வேண்டிய சட்ட திட்டங்களை உருவாக்க ஒன்பது பேர்கொண்ட கமிட்டி நியமிக்கப்பட்டது.